For private circulation only

Book Post

https://christianhistoricalsociety.in/

# கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்

விலை : ரூ 60

திசை தெரியாமல் திகைக்காதிருக்க திருச்சபை வரலாறு தெரியவேண்டும்

மே 2022

இதழ் 24












## மிஷனரிகள் சந்தித்த பிரச்சனைகளும், எதிர்கொண்ட சவால்களும்










**கிறிஸ்துவுக்குள் அன்பானவர்களே,**

ஆண்டவரும் இரட்சகருமாகிய இயேசு கிறிஸ்துவின் இனிதான நாமத்தினாலே உங்கள் அனைவருக்கும் அன்பின் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

நம்முடைய திருநெல்வேலி வரலாற்றுச் சங்கத்தின் வெளியீடாகிய வரலாற்று சுவடுகள் இம்மாதத்திலே இரண்டு வருடங்களைக் கடந்து மூன்றாவது வருடத்திற்குள்ளாக பிரவேசிக்க உள்ளோம். இரண்டு ஆண்டுகள் முழுமனதோடு கூட ஒத்துழைப்பு நல்கிய அனைத்து வரலாற்று பிரியர்களுக்கும் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

இம்மாத இதழில் **"மிஷனெரிகள் சந்தித்த பிரச்சனைகளும் எதிர்கொண்ட சவால்களும்"** என்ற தலைப்பில் வரலாற்று துணுக்குகளும், ஆய்வு கட்டுரைகளும் வெளியிடப்பட்டுள்ளது. ஒவ்வொரு பிரதியும் பாதுக்காக்க கூடிய புதையலாகவே வெளிவருகின்றது. ஒவ்வொரு மாதமும் இப்புத்தகத்தினை வெளிக்கொண்டுவருவதற்கு பெரும் பொருட்செலவுகள் ஆகின்றன. எனவே உங்களால் இயன்ற பொருளுதவிகளை செய்ய முன்வரலாம். உங்கள் நட்பு வட்டாரங்களுக்கும், திருச்சபை மக்களுக்கும் வரலாற்றுச் சுவடுகளை அறிமுகப்படுத்தி அவர்களை சந்தாதாரர்களாக மாற்ற அன்புடன் கேட்டுக் கொள்ளுகின்றேன். இன்னும் பல புதிய தரிசனங்களோடு கூட புதிய ஆண்டிற்குள்ளாக பிரவேசிக்க காத்திருக்கின்றோம். தங்களது மேலான ஆதரவை நல்கும்படி அன்புடன் கேட்டுக் கொள்ளுகின்றேன். வெளியிடுவதற்காக சில புத்தகங்களை ஆயத்தப்படுத்திக்கொண்டிருக்கின்றோம், அப்புத்தகங்கள் அச்சிடப்பட்டு வெளியிடுவதற்கான பணத்தேவைகள் சந்திக்கப்பட ஜெபித்துக் கொள்ளுங்கள்.

நம் வரலாற்றுச் சுவடுகள் குறித்து ஏதாகிலும் ஆலோசனைகள் இருந்தால் அதனை ஆசிரியருக்கு எழுதி அனுப்ப அன்புடன் கேட்டுக் கொள்ளுகின்றேன். நன்றி


**சுஜித் ரெக்ஸ்**
வடிவமைப்பு
75388 12218

**மன்னா செல்வகுமார்**
ஆசிரியர்
91767 80001

மன்னா செல்வகுமார்
ஆசிரியர்
christianhistorical@gmail.com



**திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்**

வெளியீடு



# மிஷனெரிகள் சந்தித்த பிரச்சனைகளும் எதிர்கொண்ட சவால்களும்

தென் தமிழகத்தில் திருநெல்வேலி பகுதிகளில் கிறிஸ்தவம் வெகு விரைவாக பரவ ஆரம்பித்தது. ஆங்காங்கு நற்செய்தி கூறப்படவே கூட்டம் கூட்டமாக மக்கள் இயேசுவை ஏற்று கொண்டு தங்கள் புதிய மார்க்கத்தை தெரிந்தெடுத்து கிறிஸ்துவின் அன்பில் கட்டப்படலாயினார்கள். மிஷனெரிகள் வெளிநாட்டினைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும், உள்ளூர் மக்கள் அவர்களை ஏற்று கொண்டு, அவர்களின் சேவை வழியாய் இயேசுவை ஏற்றுக் கொண்டார்கள். சிறிய சபைகளாக இருந்தாலும் அத்திருச்சபைகளுக்கு மிஷனெரிகள் கொடுத்த முக்கியத்துவம் தான் நாளடைவில் அது பெரிய திருச்சபைகளாக மாறுவதற்கு காரணமாயிருந்தது. ஒரு சில காரணங்களால் தூர இடத்தில் மிஷனெரிகள் தங்கி தங்கள் ஊழியங்களை மேற்கொண்டாலும், மாதம் தோறும் தங்கள் மிஷன் எல்லைக்குட்பட்ட திருச்சபைகளை விசாரித்து, அதின் வளர்ச்சிக்குப் பெரும் பங்காற்றியிருக்கின்றார்கள். தங்கள் சொந்த தேசத்தைவிட்டு நம் தேசத்தை தேடி வந்த மிஷனெரிகளை நம் தேசம் அவர்களுக்கு சிகப்பு கம்பள வரவேற்பு வழங்கவில்லை. மாறாக அவர்களுக்கு பல பிரச்சனைகளையும், கஷ்டங்களையுமே கொடுத்தது என்பதை வரலாற்றின் பக்கங்களின் வழியாக நாம் அறிந்துக் கொள்ள முடிகின்றது.

## மிஷனெரிகள் சந்தித்த பிரச்சனைகளும் எதிர்கொண்ட சவால்களும்

தென் தமிழகத்தில் திருநெல்வேலி பகுதிகளில் கிறிஸ்தவம் வெகு விரைவாக பரவ ஆரம்பித்தது. ஆங்காங்கு நற்செய்தி கூறப்படவே கூட்டம் கூட்டமாக மக்கள் இயேசுவை ஏற்றுக் கொண்டு தங்கள் புதிய மார்க்கத்தை தெரிந்தெடுத்து கிறிஸ்துவின் அன்பில் கட்டப்படலாயினார்கள். மிஷனெரிகள் வெளிநாட்டினைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும், உள்ளூர் மக்கள் அவர்களை ஏற்று கொண்டு, அவர்களின் சேவை வழியாய் இயேசுவை ஏற்றுக் கொண்டார்கள். சிறிய சபைகளாக இருந்தாலும் அத்திருச்சபைகளுக்கு மிஷனெரிகள் கொடுத்த முக்கியத்துவம்தான் நாளடைவில் அது பெரிய திருச்சபைகளாக மாறுவதற்கு காரணமாயிருந்தது. ஒரு சில காரணங்களால் தூர இடத்தில் மிஷனெரிகள் தங்கி தங்கள் ஊழியங்களை மேற்கொண்டாலும், மாதம் தோறும் தங்கள் மிஷன் எல்லைக்குட்பட்ட திருச்சபைகளை விசாரித்து, அதின் வளர்ச்சிக்குப் பெரும் பங்காற்றியிருக்கின்றார்கள். தங்கள் சொந்த தேசத்தைவிட்டு நம் தேசத்தை தேடி வந்த மிஷனெரிகளை நம் தேசம் அவர்களுக்கு சிகப்பு கம்பள வரவேற்பு வழங்கவில்லை. மாறாக அவர்களுக்கு பல பிரச்சனைகளையும், கஷ்டங்களையுமே கொடுத்தது என்பதை வரலாற்றின் பக்கங்களின் வழியாக நாம் அறிந்துக் கொள்ள முடிகின்றது.

## கிழக்கத்திய கம்பெனியினால் எழுந்த பிரச்சனை

வியாபார நோக்கத்தோடு இந்திய தேசம் வந்த கிழக்கத்திய கம்பெனியானது, இந்தியாவில் காணப்பட்ட பலவித சாதகமான சூழ்நிலைகளைத் தனதாக்கிக் கொண்டு காலூன்ற ஆரம்பித்தது. ஆரம்பக்காலங்களில் வியாபாரம் மட்டுமே தங்கள் குறிக்கோள் என்றிருந்த கம்பெனிநாளடைவில் அரசியல் பலத்தை கையிலெடுத்து தேசத்தை அடிமைத்தனத்திற்குள்ளாக்கியது. பிரிட்ஷ்காரர்கள் என்றாலும் அவர்கள் கிறஸ்தவத்திற்கு எதிரானவர்களாகவே இருந்தார்கள். தங்கள் தேசத்தைச் சார்ந்தவர்கள் இங்கு வந்து கிறிஸ்துவை அறிவிப்பதினையும், இங்குள்ள மக்களுக்கு கல்வியறிவினை புகட்டுவதனையும் விரும்பாதிருந்தார்கள். இந்திய மக்கள் கல்வியறிவினைப் பெற்றார்களென்றால் தங்களால் ஆதிக்கம் செலுத்த முடியாதென்று நன்குணர்ந்த வியாபாரிகள், மிஷனெரிகளை பெரிதும் பாடுபடுத்தினார்கள்.

தரங்கம்பாடி மிஷனெரியான சீகன்பால்க் டச்சுக்காரர்களால் பெரிதும் பிரச்சனைகளைச் சந்திக்க வேண்டியிருந்தது. பிறப்பினாலே ஜெர்மானியரான சீகன்பால்க், டென்மார்க் அரசன் நான்காம் பிரட்ரிக் விருப்பத்தின்படி, இந்திய தேசம் மற்றும் பிற தேசங்களில்

இருக்கும் தன்னுடைய காலணிகளில் மிஷன் பணிகள் நடைபெற வேண்டுமென்கிற நோக்கோடு கூட சீகன்பால்க் மற்றும் ஹென்றி பூளுட்சோ ஆகிய இருவரையும் தன் கடிதத்தோடு கூட இந்திய தேசம் அனுப்பினார். சீகன்பால்க் மற்றும் அவரது நண்பருக்கும் கப்பல் பிரயாணம் பெரிய சவாலாகவே இருந்தது. வரும் வழியில் கப்பல் தலைவனும் அவனுடைய ஊழியர்களும் கப்பலில் அடிமைகளாக கொண்டுவரப்பட்ட மக்களிடம் நடந்துக் கொண்ட விதம், சீகன்பால்க் மற்றும் அவரது நண்பன் இருவரையும் வெகுவாக முகம் சுழிக்க வைத்தது. எனவே இவர்கள் கப்பல் தலைவனுக்கு எதிராக, அடிமையானவர்களுக்கு ஆதரவாக செயல்பட்டதினிமித்தம், கப்பல் தலைவனின் பகையை சம்பாதிக்க வேண்டியதாயிற்று. டென்மார்க் அரசன் தன்னுடைய் கடிதத்தோடு கூட இருவரையும் அனுப்பினாரே அன்றி, அவர்கள் இந்திய தேசம் வரும் செய்தி இங்கிருந்த அவருடைய அதிகாரிகளுக்குத் தெவிக்கப்படாதிருந்தது. எனவே இந்திய தேசம் வந்திரங்கிய அவர்களை வரவேற்பதற்கு ஆளில்லாமல் போகவே, கப்பல் தலைவன் அவர்களை கரை சேறுவதற்கு மறுத்துவிட்டான். 1706ம் வருடம் ஜீன் மாதம் 6ம் தேதி தரங்கம்பாடி வந்திரங்கிய சீகன்பால்கு மூன்று நாட்களில் கப்பலியே வைக்கப்பட்டிருந்தார் அதன்பிறகு ஜீலை மாதம் 9ம் தேதிதான் அவர் தரங்கம்பாடியின் கடற்கரை மணலை மிதிக்கமுடிந்தது. கரை வந்து சேர்ந்த அவரை வரவேற்பதற்கு ஆட்கள் இல்லாதிருந்தார்கள். டென்மார்க் அரசனின் கடிதத்தோடு கூட வந்திருப்பதினால் அரசின் ஒன்றனாக இருக்கலாம் என்று எண்ணி அவரை ஆதரிப்பதற்கு ஆட்கள் இல்லாதிருந்தார்கள். பல பகுதிகளில் சாலைகளில் மக்கள் கூடி, கிறிஸ்தவத்திற்கு எதிரான காரியங்களைக் குறித்து ஆலோசிக்க ஆரம்பித்தார்கள். சாலையோரங்களில் கூடி இவற்றை ஆலோசித்தப்படியினால் தங்கள் கூடுகைக்கு 'சாலைத்தெருச் சங்கம்' என்று பெயர் சூட்டிக் கொண்டார்கள்.

### விபூதி சங்கம்

சாலைத்தெருச் சங்கம் படிப்படியாக தன்னுடைய வளர்ச்சியைக் காண ஆரம்பித்தது. அநேக மக்களை அங்கத்தினாரக சேர்த்து பல கிளைகளை ஏற்படுத்தினார்கள். 'சாலைத்தெரு' சங்கத்தைச் சார்ந்தவர்கள் நாளடைவில் 'விபூதி சங்கம்' என்றொரு சங்கத்தினை ஏற்படுத்தினார்கள். மிகுந்த கட்டுப்பாட்டுடன் இச்சங்கத்தைச் சார்ந்தவர்கள் காணப்பட்டார்கள். அவர்களுக்கென்று சில விதிமுறைகளைக் கையாண்டார்கள். குறிப்பாக எப்பொழுதும் தீருநீறு வைத்திருப்பேன், மார்க்கத்திற்கு உண்மையாயிருப்பேன், மார்க்கத்தினைப் பாதுகாத்து கிறிஸ்தவம் பரவுவதைத் தடுப்பேன் போன்றவைகளாகும்.

### விபூதி சங்கம் : திருச்செந்தூர் கிளை

இச்சங்கத்தின் கிளையொன்று திருச்சந்தூரிலும் ஆரம்பிக்கப்பட்டது. இச்சங்கத்தின் மூலம் திருநெல்வேலியில் பரவும் கிறிஸ்தவத்தை எப்படியாவது தடை செய்ய வேண்டுமென்று முனைப்போடு கூட செயலாற்ற தொடங்கியது.

விபூதி சங்கத்தைச் சார்ந்தவர்கள் மிஷனெரிகளுக்கு மிகுந்த சவாலாகவே இருந்தார்கள். மிஷனெரிகள் ஒருபுறம் கிறிஸ்துவின் அன்பைக் கூறி அவர்களை கிறிஸ்துவினிடத்தில் வழிநடத்த, இவர்களை புதிய கிறிஸ்தவர்களை மிரட்டி, அவர்களை மறுதலிக்கச் செய்து அவர்களை பழைய மார்க்கத்திற்கு திரும்பப்பண்ணினார்கள். ஏற்கெனவே கிறிஸ்தவர்களாக இருப்பவர்களை மிகவும் துன்புறுத்தி, அவர்கள் அடையும் துன்புறுத்துதலைக் கண்டு மற்றவர்கள் கிறிஸ்துவை ஏற்றுக்கொள்ளாதபடி அவர்களை பயமுறுத்தினார்கள். சபை ஊழியர்கள், மிஷனெரிகள் போன்றோரை அடித்துத் துன்புறுத்தி அவர்களை சுவிசேஷப் பணி செய்யவிடாதபடி தடுத்தார்கள்.

### ஏரல் கலகம்/ ஏரல் துன்பம்

ஏரல் பகுதியில் கிறிஸ்தவம் வெகுவாக வளர ஆரம்பித்தது. பண்ணைவிளை, ஏரல் மற்றும் அதனை சுற்றியுள்ள பகுதிகளில் கனம் பெற்றிட் ஐயரவர்கள் பணியாற்றி வந்தார்கள். கனம் பெற்றிட் ஐயரவர்கள் ஏரல் மக்களின் கல்வியறிவினை வளர்ப்பதற்காக பள்ளிக்கூடம் ஒன்றினை ஏற்படுத்தினார்கள். கிறிஸ்தவ பள்ளிக்கூடமாக இருந்தாலும், அப்பள்ளியில் பணியாற்றுவதற்கு கிறிஸ்தவ ஆசிரியர் ஒருவரும் கிடைக்காதக்காரணத்தினால் இந்து மார்க்கத்தைச் சார்ந்த ஒருவரை ஆசிரியராக நியமித்தார். ஆனால் இந்து மார்க்கத்தைச் சார்ந்த இவ்வாசிரியர் சுவிசேஷகரானார். ஒவ்வொரு நாளும் இயேசுவின் அன்பினைக் குறித்து இவர் கூறவே, அங்கிருந்த சுமார் 30 குடும்பத்தினர் கிறிஸ்தவர்களாக மாறினார்கள். கிறிஸ்தவர்களாக மாறி சிறிது காலத்திற்குள்ளாக விபூதி சங்கத்தினரால் பிரச்சனை ஏற்பட ஆரம்பித்தது. சபை ஊழியர் கூட இல்லாத அக்காலத்தில் ஏரல் திருச்சபை பெரும் பிரச்சனைகளை சந்திக்க வேண்டியிருந்தது. விபூதி சங்கத்தார், ஏரலில் புதிதாக கிறிஸ்துவை ஏற்று கொண்ட மக்களை அடித்து துன்புறுத்தினார்கள். துன்புறுத்துதலை தாங்கிக் கொள்ளமுடியாத ஏரல் மக்களை கிறிஸ்துவை மறுதலித்து பின்வாங்கிப்போனார்கள். இச்செய்தியினைக் கேள்ளிப்பட்டு அக்கம்பக்கத்திலிருந்த மிஷனெரிகளும், ஊழியர்களும் ஏரல் வரவே, அவர்களுக்கும் அடியும் உதையும் காத்திருந்தது. அடித்து துன்புறுத்தியது மட்டுமல்லாது, உபதேசியார்கள் மீது வழிப்பறி செய்தார்கள் என்ற வழக்கும் தொடுக்கப்பட்டது. தாங்கள் குற்றமற்றவர்கள் என்பதை நிருபிக்க உபதேசியார்கள் ஐரோப்ப மாஜிஸ்டிரேட்டிடம் மேல்முறையீடு செய்தும் பலனில்லாமல் போகவே, விபூதி சங்கத்தாருக்கு ஊக்கம் கொடுத்தது போலிருந்தது. ஏரல் கலகத்தினைத் தொடர்ந்து பல இடங்களில் கலங்களை ஏற்படுத்த ஆரம்பித்தார்கள்.

### நாலுமாவடியில் கல்மழை

நாலுமாவடியிலும் கிறிஸ்தவம் பரவ ஆரம்பித்தது. ஒருநாள் மெஞ்ஞானபுரம் மிஷனெரியாக இருந்த பெரிய தோமாஸ் ஐயர் என்றழக்கப்படும் மிஷெனெரி ஒருவர் நாலுமாவடி மக்களைச் சந்தித்து அவர்களுக்கு கிறிஸ்துவின் அன்பை பகிர்ந்துக் கொண்டார். அதற்கு பின்னர் ஆலயம் சென்று ஆராதனை நடத்தினார். அச்சமயம் விபூதி சங்கத்தினைச் சார்ந்தவர்கள் ஆலயத்தினைச் சூழ்ந்து கல்வீச ஆரம்பித்தார்கள். நாலுமாவடி உபதேடியார் பவுல் அவர்கள் வெளியே வந்து பார்க்கவே, ஒரு கல் அவரது தலையை பதம் பார்த்தது. ரத்த வெள்ளத்தில் ஆலயத்திற்குள் வந்து, ஆலயத்தின் கதவுகளையும், ஜன்னல்களையும் சாத்திக் கொண்டார். வெளியே கூடியிருந்த மக்கள் ஓயாது கற்களை வீசிக் கொண்டிருந்தார்கள். தகவல் அறிந்த வாலிபன் ஒருவன் சுமார் மூன்று மைல் தூரம் ஓடி நாசரேத்தில் பணியாற்றிக் கொண்டிருந்த மிஷனெரி காமரர் ஐயரவர்களை அழைத்து வந்தார். காமரர் ஐயரவர்களுடன் நாசரேத்து கிறிஸ்தவர்களும் ஒன்று கூடி வருவதை அறிந்த சங்கத்தைச் சார்ந்தவர்கள் இடத்தைக் காலி செய்துவிட்டனர். அதன்பிறகு சிறிது காலம் நாலுமாவடி சபைக்கு எந்த ஒரு உபவத்திரமும் இல்லாதிருந்தது. நாலுமாவடி கிறிஸ்தவர்கள்

தங்கள் ஜெப வீட்டினை இடித்து அவ்விடத்தில் புதிய ஆலயம் ஒன்றினை கட்டி எழுப்பினார்கள்.

**விபூதி சங்கமும் கனம் ஜான் தாமஸ் ஐயரவர்களும்**

கனம் ஜாண் தாமஸ் ஐயரவர்களின் ஊழியக்காலத்திலும் இச்சங்கத்தை சார்ந்தவர்களால் பெரும் பிரச்சனைகளைச் சந்திக்க நேர்ந்தது. இயேசுவின் அன்பினை அறிந்து கிறிஸ்தவ மார்க்கத்தில் இணைய ஆயத்தமாயிருந்த பல செல்வாக்குமிக்க மனிதர்கள் இச்சங்கத்தினரால் மிரட்டப்பட்டு சபையில் இணையக்கூடாமல் போயிற்று. பலர் பின்வாங்கிப் போனார்கள். நெடுவிளை என்ற கிராமம் மெய்ஞானபுரமாக மாறி சில ஆண்டுகளுக்குள்ளாக இச்சங்கத்தாரால் பெரும் பிரச்சனையை சந்திக்க நேர்ந்தது. சுமார் 500க்கும் மேற்பட்டவர்கள் ஒன்று கூடி கிராமத்தைக் கொள்ளையிடப்போவதாகவும், அதனைத் தீக்கிரையாக்கிப் போடப்போவதாகவும் பயமுறுத்தினார்கள். மெய்ஞானபுரத்தை நெருங்கியதும் ஒருவகை அச்சம் அவர்களுக்கு பிடிக்கவே, ஊரை நெருங்காமல் அவர்கள் விலகிச் சென்றார்கள். இச்சங்கத்தாரின் அச்சுறுத்தலால் மெய்ஞானபுரம் சேகரத்தில் மட்டும் ஆயிரம் பேர் மறுதலித்தார்கள், சாத்தான்குளம் சேகரத்தில் இரண்டாயிரம் பேர் மறுதலித்திருக்கிறார்கள்.

**முடிவுரை**

ஒரு அடி முன்னேறினால் மூன்றடி சருக்குதலைத்தான் மிஷனெரிகள் அக்காலங்களில் சந்திக்க நேர்ந்தது. வெயிலின் உஷ்ணம் ஒரு புறமிருக்க, சீதோஷன நிலை புதிதாக இருந்தபடியினால் சரீரத்திற்கு ஒவ்வாத நிலை என்று பல பாடுகளைப்பட்டார்கள். அதோடுகூட மிஷனெரிகளுக்கு பிறக்கும் குழந்தைகளுக்கு சரிவர மருத்துவ உதவிகள் கிடைக்காதக் காரணத்தினால் அநேக பச்சிளங் குழந்தைகளை இழக்கக் கொடுத்தார்கள். பல நேரங்களில் அவர்களை அனுப்பிய மிஷன் நிறுவனங்கள் உதவித் தொகையினை அனுப்ப தாமதித்தனினால் பல இன்னல்களை அடைய நேரிட்டது. இப்படிப்பட்ட பிரச்சனைகளுக்கும், சவால்களுக்கும் மத்தியில் தான் கிறிஸ்தவம் ஆழமாக வேர் விட்டு, தன் கிளையை பரந்து விரியச் செய்தது. இன்று தென் தமிழகத்தில் நாம் காணும் கிறிஸ்தவம் பல மிஷனெரிகளின் கண்ணீரில் உருவாக்கப்பட்டது என்று சொன்னால் அது மிகையாகாது. அநேக இழப்புகளுக்கும் கஷ்டங்களுக்கும் மத்தியில் கிறிஸ்துவின் அன்பினை நமக்கு எடுத்துரைத்தார்கள். இத்தனை தியாகத்திற்கு மத்தியில் இயேசுவை பெற்ற நாம் இன்று வந்த வழி அறியாது முரண்பட்டு வாழ்ந்துக் கொண்டிருக்கின்றோம். கிறிஸ்தவத்தை அழிப்பதற்கு அக்காலங்களில் புற மத சங்கங்களே இருந்தது. ஆனால் மிஷனெரிகள் அரும்பாடுப்பட்டு சம்பாத்தித்த திருச்சபைகளை அழிப்பதற்கு இன்று திருச்சபைகளுக்குள்ளாகவே சங்கங்கள் உருவாகிவிட்டது. கிறிஸ்தவத்தை அழிப்பதற்கான கோடாரிகள் கிறிஸ்தவர்கள் என்று நிலை எழுந்துள்ளது. சிந்தித்து செயல்படாவிட்டால் இன்னும் சிறுது காலத்திற்குள்ளாக நாம் விதைத்ததை அறுக்க நேரிடும்.

**அருள்திரு ஜான் சாமுவேல்**
பண்டார செட்டிவிளை



# “உன்னைக் காக்கிறவர் உறங்கார்”

சுஜித்

திருமலை நாயக்கன்பட்டி என்றழைக்கப்பட்ட புளியங்குடி சுரண்டை சேகரத்திலிருந்து சிவகாசி வட்டத்துடன் இணைக்கப்பட்ட சபைகளில் பெரியது. ராக்லாந்தின் மேற்பார்வையிலிருந்த சபைகளில் அது அதிகத் தொலைவிலிருந்தவற்றி லொன்று. அச்சபையில் ஒற்றுமைக்குறைவேற்பட்டிருந்தபொழுது ராக்லாந்து அங்கு நேரிற் சென்று சமாதானம் நிலவச் செய்தார். சபை மக்கள் அவரை வெகுவாய்ப் பாராட்டியதுமல்லாமல், அதுமுதல் அவரை உண்மையுடன் நேசித்து, அவருடைய சொற்கேட்டு வந்தனர். அவரும் அச்சபை மீது அதிக அன்பு கொண்டார். ஆயினும், சபையார் மிஷனெரிமார் தங்களைச் சரிவரக் கவனிக்கவில்லை என்று குறைப்பட்டுக் கொண்டதை அறிந்து, இனி அவர்கள் அவ்வாறு குறைசொல்ல இடமிருக்கக்கூடாது என்றும் தீர்மானித்துக்கொண்டார்.

1858 செப்டம்பர் மாதம் அவ்வூரில் ஒரு கலியாணம் நடக்கவிருந்தது. மாப்பிள்ளை புளியங்குடி சபையைச் சேர்ந்தவர். பெண் சுரண்டையிலுள்ளவள். கலியாணம் புளியங்குடி ஆலயத்தில். முந்தின நாள் மாலை 5 மணிக்கு, தனது வெள்ளை மட்டக் குதிரையிலேறி, சிவகாசியிலிருந்து ராக்லாந்து புறப்பட்டார். அன்று முழுவதும் மந்தாரமாயிருந்தது.

சுமார் 7 மணிக்கு அவர் வடகரை என்ற ஊரை அடைந்து அங்கு குதிரைக்காரன் வசத்தில் குதிரையை ஒப்புவித்துவிட்டு, ஆயத்தமாக அங்கு காத்துக்கொண்டிருந்த தன் வில்வண்டியிலமர்ந்து பிரயாணத்தைத் தொடர்ந்தார். வண்டி நகர்ந்து நகர்ந்து பந்தல்புளி என்ற கிராமத்தை நெருங்கியதும் சக்கரங்களிலொன்று கழன்றுவிட்டது. வண்டிக்காரனும், வடகரையிலிருந்து ராக்லாந்துடன் புறப்பட்ட ஏசுவடியானுபதேசியாரும். ஒருமணி நேரமாக வண்டியைப் பழுதுபார்க்க முயற்சித்தும் பயனில்லை. இனி கருவநல்லூரிலிருந்து கொல்லனொருவனைத் தருவித்து அதைச் சரிப்படுத்துவதைத் தவிர வேறு வழியில்லை யென்றானது. அது காலை 7 அல்லது 8 மணிக்கு முன் சாத்தியமாகாது என்றும் தெரிந்தது. இரவு பந்தல்புளியில் தங்கி மறுநாள் புறப்படுவதாயின் 7 அல்லது 8 மணி நேரம் வெய்யிலில் பிரயாணம் செய்ய வேண்டியதிருக்கும். மேலும், கலியாண நேரத்துக்குள் புளியங்குடி போய்ச்சேர்வதும் கூடாததாகும். குறித்த வேளையில் கலியாணத்தை நடத்தக்கூடாமற் போயின, புளியங்குடிச் சபையார் ஏமாற்றமடைவர். ஆகவே மீதியான சுமார் 16 மைல் தொலைவையும் நடந்தே கடந்துவிடுவது என்று ராக்லாந்து தீர்மானித்தார். உடனே நடக்க வாரம்பித்தார். அப்பொழுது இரவு 10 மணி. வானத்தில் நட்சத்திரங்களொன்றும் காணப்படவில்லை. ஆகவே, தேவையான வெளிச்சமில்லை. என்னும் நடந்தார் கருவநல்லூர்த் தெருக்களில் (கருவநல்லூர் அல்லது கருவேலநல்லூர் என்பதுதான் இவ்வூரின் சரியான பெயரெனக் கல்வெட்டுச் சான்றுகளுண்டு. ஆனால் இன்று அது கரிவலம்வந்தநல்லூர் என்று உருமாறியிருக்கிறது.) நடந்து, தேர்நிலையத்தைக் கடந்து, ஊருக்கு வெளியே ஒரு மைல் போயிருப்பார். பனையூர்க் குன்றுக்கு சமீபமாக புளியங்குடிப் பாதை செல்லுகிறதென்று அவருக்கு தெரியும். தொலைவில் குன்று ஒன்று தெரிந்தது. உடனே அதற்கு நேராகத் திரும்பி நடந்தார். நான்கு அல்லது ஐந்து மைல் போயிருப்பார். குறுக்கே ஒரு பெரும்பாதை. அது அவருக்குச் சற்று ஆச்சரியத்தைத் தந்தது. என்றாலும் அப்பாதையில் நடக்கலானார்.

அப் பாதை ஒரு பெரிய ஊரை அடைந்தது அந்நகருக்குள் சென்றார். சில தெருக்களைக் கடந்தார். ஒரு பெரிய தேரைக் கண்டார். அது சில மணி நேரங்களுக்கு முன் தான் பார்த்த அதே தேர் என்றறிந்தார்! ஐயோ, மறுபடியும் கருவநல்லூருக்கே வந்துவிட்டோமே யென்று தெரிந்ததும், இத்தனை நடையும், நேரமும் வீணாயினவேயென்று அங்கலாய்த்து, நின்ற இடத்திலேயே உட்கார்ந்தார். அதிகக் களைப்பாயிருந்தது. சற்று நேரம் உட்கார்ந்த பின் எழுந்து, பனையூர்க் குன்றைக் கூர்ந்து பார்த்துக் கண்டுகொண்டு, அக்குன்றின்மீது வைத்த கண்ணை வாங்காமல் அதற்கு நேராக நடந்தார், நடந்தார், நடந்துகொண்டேயிருந்தார். வழியில் முட்புதர்களுக்குள் விழுந்தார். அவை அவருடைய கைகளையும் கால்களையும் முகத்தையும் பதம்பார்த்துக், குத்தி வருத்தின. ஒரு தடவையல்ல, பல தடவைகள் புதர்களில் விழுந்தார். வழியில் ஓடைகள் குறுக்கிட்டன. சிலவற்றில் ஆழம் தெரியாமல் காலைவிட்டார். தண்ணீரில் விழுந்து நனைந்து, எழுந்து நடந்தார். குளக்கரைகள் மலை போல் எழுந்து நின்றன. சில இடங்களில் பூட்ஸ் காலுடன் ஏற முயற்சித்துச், சறுக்கிவிழுந்து காயங்களை வாங்கிக்கொண்டார். சேறும் சகதியுமான இடங்கள் காய்ந்த தரைபோல்த் தோன்றி அவரை ஏமாற்றி, முழங்கால்

வரை படிந்த சேற்றுடன் அவரைப் போராடவைத்தன. காலை 3 மணியிருக்கும்; இனி நடக்கமுடியாது. களைப்பு மேலிட்டது. வெற்றுத் தரையிற்படுத்தார். படுத்தவர் சில நிமிஷங்களில் உறங்கிப்போனார்.

யாருமற்ற காடு! காட்டில் விலங்கினங்கள்; விஷ ஜெந்துக்கள்; நரிகளின் ஊளை; கோட்டானின் கதறல். ஆனால் அயர்ந்து தூங்குகிறார், அன்பர் இயேசுவின் நண்பர்! ராக்லாந்து உறங்குகிறார், ஆனால் இரட்சகர் உறங்கவில்லை! “உன்னைக் காக்கிறவர் உறங்கார்” என்பதல்லவோ திருவாக்கு!

மெல்லிய காற்று; ஆனால் குளிர்காற்று. களைத்த உடம்பு குளிரில் நடுங்குகிறது. தூக்கம் நீத்தெழுந்த ராக்லாந்து, ஐயோ உறங்கிட்டேனே, எத்தனை மணி நேரத்தைத் தூக்கத்தினால் இழந்துவிட்டேன்! என்றிரங்கினார். தன்னைத்தானே நொந்துகொண்டார். இனி சணப்பொழுதும் தாமதிக்கக்கூடாதென்று, விறு விறு வென்று நடந்தார். கேப்பை வயலை ஊடுருவினார். தட்டைகள் அவரது கால்களைக் காயப்படுத்தின. வடியும் ரத்தத்தைப் பொருட்படுத்தாது நடந்தார். நடை நீண்டுகொண்டே போனது; போய் ஒரு சிற்றூரில் நின்றது. அப்பொழுது விடியும் வேளை. அதிகாலையி லெழுந்து, நேரப்பட வேலையில் தரிக்க முற்பட்ட இரண்டொருவர் அவரைக் கண்டனர்; கண்டும் காணாதவராய்ப் போயினர் தம் வழியே. அச்சிற்றூர் பனையூரைச் சேர்ந்தது. ஓவிடுபுரம் என்பது அதின் பெயர். சற்றுநேரம் நின்றார். மக்கள் நடமாட்டம் சற்று அதிகமாகியது. இரண்டொருவர் அவரை நெருங்கி, யார், என்று விசாரித்து, அவரது கதையைக் கேட்டு, அனுதாபம் கொண்டு, பனையூரின் மற்றொரு பகுதியிலிருந்த ஒரு சாவடிக்கு இட்டுச் சென்றனர். கொஞ்சம் தண்ணீர் அருந்திவிட்டு, அச் சாவடியில் சற்றே ஓய்வெடுத்து, மீண்டும் புறப்பட்டார். சூரியோதயமாயிற்று. கூடவே மழையும் பிடித்துக்கொண்டது! வண்டி கிடைக்குமா என்று பார்த்தார்; கிடைக்கவில்லை மறுபடியும் நடையைத் தொடர்ந்தார். மழையில் வேகமாக நடந்து, பொதியப்பிள்ளைக் கோட்டூர் என்னும் கிராமத்தையடைந்து, ஒதுக்கிடம் தேடினார் வீட்டின் கூரை இறக்க மொன்றில் மழைக்கு ஒதுங்கி நின்றார். களைப்பு அதிகமே யொழிய, மற்றப்படி யொன்றுமில்லை. மழை நின்றதும், வண்டி கிடைக்குமாவென்று அங்கு வந்தவர்களிடம் கேட்டார். மிஷனெரி யென்றறிந்தபோது அவரைக் கேலி செய்ய எண்ணின சிலர், அடுத்திருந்த ஆரியூரில் அவருக்காக வண்டி யொன்று காத்திருந்ததென்றும், ஒரு மனிதனைக் காட்டி, அவன் தான் வண்டிக்காரனென்றும், அவனுடன் போய் வண்டியிலேறிப் போகலாமாமென்றும் கூறினர். பாவம் ராக்லாந்து அதை நம்பினார். வண்டிக்காரன் வருவான் வருவானென்று காத்து நின்றார். அவன் வரவேயில்லை. பெருத்த ஏமாற்றம்! தான் ஏமாற்றப்பட்டதை அறிந்தார்; நேரம் வீணாயிற்றேயென்று வருந்தினார். செய்வதென்ன வென்று சற்றே யோசித்து, நடக்கவேண்டியது தான் என்று முடிவு கொண்டவராக, நடக்கத் தொடங்கினார் மீண்டும்!

களைப்பும் ஆயாசமும் பசியும் அவரை வருத்தின. சிற்சில இடங்களில் மர நிழலில் சற்று உட்கார்ந்து, சிறிது இளைப்பாறிப் பின் எழுந்து நடந்தார். நடந்து. கடைசியில் மலைபடிக்குறிச்சியை யடைந்தார். அந்த ஊர்ப் பெரியமனிதரை அவருக்குத் தெரியும். நேரே அம் மனிதரின் வீடு சென்றார். அவர், ஐயரை அன்புடன் வரவேற்று, வரலாறு கேட்டு வருந்தினார். பாலும் சர்க்கரையும் கொடுத்து உபசரித்தார். ஒரு கட்டிலில் படுக்கை விரித்துச் சற்று



உறங்கியெழச் செய்தார்.

ஐயரும் சிறிது பொழுது இளைப்பாறி, அப்பெரியவருக்கும் அங்கு கூடிவந்த மற்ற மக்களுக்கும் சுவிசேஷம் கூறினார். அவர்களில் சிலர் பேரன் பூருக் ஐயரை நன்கறிந்தவர்கள்.

சுமார் ஒரு மணி நேரம் கழித்து வண்டியொன்று தயாரானது. ராக்லாந்து அதில் பிரயாணம் செய்து, புளியங்குடி போய்ச் சேர்ந்தார். கலியாண நேரம் தவறி விட்டதோ என்று கலங்கிக்கொண்டே வந்த அவருக்குப் பெண் இன்னமும் சுரண்டையிலிருந்து வந்துசேர வில்லையென்ற செய்தி ஆறுதலளித்தது!

மாலை 4 மணிக்குத் திருமண ஆராதனை. அதன் பின் ஒரு குழந்தை ஞானஸ்நான ஆராதனை'; பின்னர் மாலையில் பரிசுத்த நற்கருனை ஆராதனை! பதின்மூன்று பேர் பங்கு பெற்றனர்.

இதற்கிடையில் பந்தல்குடியில் பழுதுபட்ட வண்டி புளியங்குடி சேர்ந்துவிடவே, நற்கருணையாராதனைக்குப் பின் அதிலேறி, இரவோடிரவாக வாகைக்குளத்துக்குப் பிரயாணமானார். மேற்கண்டது போல், கஷ்டங்களைப் பாராட்டாமல் சபையாரை நேசித்தது போலவே, உடன் மிஷனெரிமார், உபதேசிமார், ஊழியர் முதலானவர்களையும் ராக்லாந்து உள்ளன்புடன் நேசித்து, எந்த விதத்திலும் அவர்கள் மனவேதனையடைந்துவிடக்கூடாதென்று கருத்தாயிருந்தார். தன் உடனூழியர் தன்னை விட்டுப் பிரிந்து தூரமான இடங்களில் வேலை செய்ய நேரிட்ட சமயங்களில், அவர்களுக்கு அடிக்கடி கடிதமெழுதி உற்சாகப்படுத்துவது வழக்கம். வேதநாயகம், கொர்னேலியு, சத்தியநாதன், சாமுவேல் என்ற இந்திய உடனூழியரை இந்தியரென்ற காரணத்திலாவது, உபதேசிமார்தானே என்றதினாலாவது, தன்னைவிட எவ்விதத்திலும் குறைந்தவர்களாகக் கருதாமல், தனக்கு நிகரானவர்களாகவும், ஏன், உயர்ந்தவர்களாகவுங்கூட எண்ணி, மரியாதையும் அன்பும் செலுத்தி வந்தாரென்பது அவர் அவர்களுக்கெழுதிய கடிதங்களில் தெளிவாகும் உண்மை .



# நாங்கள் கிறிஸ்தவர்கள்

புளியரை இயற்கை வனப்புமிக்க அழகிய சிற்றூர். அச்சிற்றூரில் ஒரு சின்னஞ்சிறு கிறிஸ்தவத் திருச்சபை. சுரண்டை மிஷனெரி பேரன்புரூக்கின் அன்பிலும் அரவணைப்பிலும் வளர்ந்த சபை. தாழ்வாக எண்ணப்பட்ட ஒரு குலத்தைச் சேர்ந்த மக்களான, சுமார் பத்துக் குடும்பத்தினர் அச்சபையின் உறுப்புக்கள். அவர்கள், ஒருகாலத்தில் ரோமானித்த சபையிலிருந்து, நம் சபைக்கு வந்திருந்தனர். அவர்களைச் சபையில் சேர்த்த மிஷனெரி அன்னாரின் ரோமானித்தப் பெயர்களை மாற்றவில்லை. ஏற்கனவே, ரோமானித்த மதத்திலிருந்து ஓரளவேனும் கிறிஸ்தவ அறிவும் பண்பும் கொண்டவர்களா யவர்களிருந்ததினால், கிறிஸ்து மார்க்க அறிவிலும் விசுவாச வாழ்க்கையிலும் அவர்களை வளர்ப்பது அதிகச் சிரமமாயிருக்கவில்லை.

மகிழ்ச்சியும் அமைதியுமான கிறிஸ்தவ வாழ்க்கை நடத்தி வந்த அவ்வெளிய மக்களுக்குத், திடீரென்று ஒரு கொடிய சோதனைக் காலம் தொடங்கியது.

1857-ம் ஆண்டு பிரிட்டிஷ் இந்தியா கவர்ன்மென்றுக்கும் திருவாங்கூர் மகாராஜாவுக்குமிடையில் உண்டான ஓர் உடன்பாட்டின்படி, புளியரைக் கிராமம் திருவாங்கூர் இராச்சியத்துடனிணைக்கப்பட்டது. அக்காலத்தில் அந்நாட்டு அரசு பெரும் பாதையமைக்கும் திட்டமொன்றிட்டு, அவ்வேலைக்கும், ஆரியங்காவு இந்துக் கோவிலொன்றைப் பழுது பார்க்கும் வேலைக்கும், கல்லுடைக்கவும் மண் சுமக்கவும் ஆட்களை அமர்த்திவந்தது. அரசாங்க அதிகாரிகள் புளியரைக்கும் சென்று, அவ்வூரில், கிறிஸ்தவர்களான பிச்சன், மாதாவடியான், பெரிய அந்தோனி, சின்ன அந்தோனி என்ற நால்வருடன், வேறு சில இந்துக்களையும் அவ்வேலைகளுக்குப் போகச் சொல்லிக் கட்டளை இட்டார்கள். கிறிஸ்தவர்கள் நால்வரும், **“பெரும்பாதை வேலைக்குப் போகிறோம். கோவில் வேலைக்குப் போக மாட்டோம். நாங்கள் கிறிஸ்தவர்கள்”** என்றார்கள். அதிகாரிகள் எவ்வளவு கட்டாயப்படுத்தியும் அவர்கள் மறுத்தே நின்றதினால், அவர்களை அவ்வதிகாரிகள் கைது செய்து, விலங்கிட்டு, மணியக்காரனிடம் இழுத்துச்சென்றனர். மணியக்காரனும், “நீங்கள்கீழ்ப்படிந்து, கோவில் வேலையையும் செய்யத்தான் வேண்டும்,” என்று கட்டாயப்படுத்த, அவர்கள் பிடிவாதமாய் மாட்டோமென்றதினால், அவ்வதிகாரி கோபாவேசங் கொண்டு, அவர்களை மரத்தூண்களோடு இறுகப் பிணித்து, புளியம்விளார்களால் அடிக்கும் படி ஆக்யாபித்தான். அங்கு நின்ற சேவகர்கள் உடனேயே அக்கட்டளையை நிறைவேற்றினர். அந்நால்வரும், முதுகிலும், முகத்திலும், நெஞ்சிலும், கைகளிலும், கால்களிலும் புளியம்விளார்ப் பூசைகளினால் ரத்தம் கசிந்து சொட்டுச் சொட்டாய் வழிந்த போதிலும், தங்கள் தீர்மானத்தில் உறுதியாய் நின்று, “ரோட்டு வேலைக்குப் போகிறோம், கோவில் வேலைக்குப் போகமாட்டோம்,” என்று சாதித்தார்கள். மணியக்காரன், ‘இனித் தன்னால் ஒன்றும் செய்யமுடியாதென்று கண்டு, அவர்களை, விலங்கிடப்பட்டவர்களாய்ச் சேவகர் வசம் ஒப்புவித்துச், செங்கோட்டைத் தாசில்தாரிடம் அனுப்பி வைத்தான்.

செங்கோட்டைத் தாசில்தார் அவர்களை விசாரித்தார். அவர் கொடுத்த தீர்ப்பு: புளியரை திருவாங்கூர் இராச்சியத்தைச் சேர்ந்து விட்டது. அது இந்து அரசாங்கத்தைக் கொண்ட இராஜ்ஜியம். மன்னர் வழியே மக்கள் வழியும்! ஆகையினால், அவ்வூரார், ஒன்று: இந்துவாயிருக்கவேண்டும், அல்லது; கிறிஸ்தவர்களாயிருக்க வேண்டுமென்றால் நல்லூருக்கு ஓடிப்போக வேண்டும்!! இத்தீர்ப்புக் கூறி, அத்தாசில்த்தார் அந்நால்வருக்கும் சிறைத் தண்டனை விதித்தார். அக்காலத்திய சிறை வாழ்க்கை இக்காலத்திலுள்ளது போலல்ல. சிறையிலும் துன்பமும் துயரமும் தான் கைதிகளின் பங்கு.

இச்செய்திகளைக் கேள்விப்பட்ட நல்லூர் மிஷனெரி கிளார்க் ஐயர் (Rev. William Clark), மிக்கேல் என்னும் திறமை மிக்க உபதேசிகரைச் செங்கோட்டைக்கனுப்பித், தாசில்தாரிடம் பேசிப் புளியரைப் பக்தருக்கு விடுதலை வாங்கிக் கொடுக்கும்படி கட்டளையிட்டனுப்பினார். அவரும் செங்கோட்டைக்குக் சென்று, தாசில்தாரைக் கண்டு பரிந்துபேசவாரம்பிக்கவே, அவருக்கும் கிடைத்தது அடியும் புளியம் விளார்ப் பூசையும்! போன மனிதன் திரும்பிவந்து செய்தி கூற, கிளார்க் ஐயர் தானே நேரில் சென்று, தாசில்தாரையும் மணியக்காரரையும் கண்டு கண்டித்துப் பேசி, சிறையில் நலிந்த நால்வரையும் விடுவித்து ஊருக்கனுப்பிவிட்டு நல்லூர் திரும்பினார். புளியரைக் கிறிஸ்தவர்கள் அதன் பின் கோயில் வேலை செய்யக் கட்டாயப் படுத்தப்படவில்லை.

# சங்கை ஹென்றி டோலர் ஐயரின் தியாக சரித்திரம்

**"மேலும் என் பெயரின் பொருட்டு வீடுகளையாவது, சகோதரரையாவது, சகோதரிகளையாவது, தகப்பனையாவது, தாயையாவது, பிள்ளைகளையாவது, நிலங்களையாவது, விட்டுவிட்டவன் எவனும் இன்னும் மிகுதியானவற்றைப் பெறுவான்; கடவுள் வாக்களித்த என்றுமுள்ள மெய்வாழ்வையும் பெற்றுக் கொள்வான்."** - மத்தேயு 19:29.(இராஜரீகம்)

சேலம் வாழ் மக்களுக்கு கிறிஸ்துவின் நற்செய்தியை அறிவிக்க புதுமண தம்பதியராய் மிகுந்த அர்ப்பணிப்புடன் வந்து, சேலத்தில் தனது ஊழியத்தை தொடங்கிய 7 வாரங்களிலேயே தனது மனைவியை நிராதரவாக தவிக்க விட்டுவிட்டு, கொடிய உயிர்கொல்லி நோயான காலரா நோய் தாக்கி உயிர் நீத்து, சேலம் பழைய ஆங்கிலேயர் கல்லறைத் தோட்டத்தில் கோதுமை மணியாக விதைக்கப்பட்டு, கிறிஸ்துவின் நற்செய்தியின் சாட்சியாக இன்று நினைவுச் சின்னமாய் ஜொலிக்கும் உண்மை ஊழியன் சங்கை ஹென்றி டோலர் ஐயரின் (1845-1870)தியாகமும், சோகமும், நிறைந்த சரித்திரத்தை உங்களுடன் பகிர்ந்து கொள்ள விரும்பிய விருப்பத்தின் விளைவே இந்த கட்டுரை.

**பல்கலை பயின்ற இளமணவாளன் :**

ஹென்றி டோலர் இங்கிலாந்து நாட்டில் ஹார்பரோ ( Harborough) என்ற ஊரில் 1845 ஆம் ஆண்டு மே மாதம் பத்தாம் நாள் பிறந்தார். பல்கலைக்கழகத்தில் படித்துப் பட்டம்பெற்று, திருத்தொண்டராக 1869 ஆம் ஆண்டு செப்டெம்பர் 2ஆம் நாள் அருட்பொழிவு பெற்று, திருமணம் முடித்த கையோடு புதுமண தம்பதியராய் கிறிஸ்துவின் நற்செய்தியை இந்தியாவில் அறிவிக்கும் நற்செய்தி அறிவிக்கும் திருத்தொண்டர்களாக அர்ப்பணிப்போடு தென்னிந்தியாவின் சேலம் பட்டணத்திற்கு வந்தவர்கள் தான் ஹென்றி டோலர் தம்பதியர்.

இன்றைய அவசர வாழ்வின் பாதைகளில் கிறிஸ்தவர்களால் மறக்கப்பட்டுப் போன இந்த இளமணவாளன் தமிழ் கிறிஸ்தவத்திற்கு மீண்டும் சொல்லப்படும் ஒரு சாட்சி! இந்திய தேசத்தில் இயேசுவை அறியாமல் பாவ வாழ்வில் தினம் தினம் சாகும் மக்கள் மத்தியில் கிறிஸ்துவின் திருத்தொண்டர்களாக ஊழியம் செய்ய தங்களையே முற்றிலுமாய் அர்ப்பணித்து, தேனிலவு, இளவயது மனைவியுடனான சுகவாழ்வு, உற்றார் உறவினர்கள், சொந்த தேசம், என அனைத்தையும் விட்டுவிட்டு இந்தியாவை நோக்கிய 4 மாதகால ஆபத்தான கப்பல் பயணத்தின் முடிவில் 1870 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 18 ஆம் நாள் இந்த இளம் தம்பதியர் சென்னைத் துறைமுகம் வந்து சேர்ந்தார்கள். அங்கு லண்டன் மிஷனெரி சங்க திருத்தொண்டர்களிடம் தமிழ்மொழி மற்றும் நற்செய்தி பணியாற்ற தேவையான பயிற்சிகளைப் பெற்றனர். பின்னர் தங்களுக்கு நியமிக்கப்பட்ட பணித்தளமான சேலம் நோக்கிய பயணத்தை மேற்கொண்டனர். பிப்ரவரி மாதத்தின் துவக்கத்தில் சேலம் வந்து சேர்ந்த டோலர் தம்பதியர் தங்களுக்கு முன்பாக சேலம் பணித்தளத்தில் பணியாற்றி வந்த மோரிஸ் தம்பதியரின் இடத்தை ஏற்றுக் கொண்டனர்.

**தீவிர ஊழியப் பணிகளின் மத்தியில் உயிர்த் தியாகம்:**

சேலம் மாவட்டத்தில் லண்டன் மிஷனெரி சங்க ஊழியங்கள் பலுகி பெருகிவந்த காலகட்டம் அது. தேவாலயங்கள், பள்ளிக்கூடங்கள், கிறிஸ்தவ குடியிருப்புகள், கிராம திருச்சபைகள், சேலம் நகரைச் சுற்றியுள்ள ஊர்களில் பள்ளிக்கூடங்கள், மிஷன் பணித்தளங்கள், ஆத்தூர், ஏற்காடு போன்ற பகுதிகளில் நல்ல வளர்ச்சியடைந்திருந்த திருச்சபை, மற்றும் கல்விச் சாலைகள். சேலத்தின் அன்றைய எல்லையான திருப்பத்தூரில் ஒரு பணித்தளம், பள்ளிக்கூடம் என்று சேலம் மாவட்டம் முழுமையும் ஒரு சவாலான பணிகள் முன்னிருப்பதை தெரிவித்தன.

சங்கை ஹென்றி டோலர் ஐயரும், அவரது துணைவியாரும் சேலம் நகரிலும் அதன் சுற்று வட்டாரங்களிலும் தங்கள் ஊழியத்தை தீவிரமாக செய்துவந்தனர். அப்பொழுது டோலர் தம்பதியினர் தங்கள் ஊழியத்தை ஆரம்பித்து 7 வாரங்கள்தான் ஆகியிருந்தது. சேலம் நகரில் அப்பொழுது கொல்லும் கொடிய காலரா உயிர்கொல்லி நோய் பரவ ஆரம்பித்திருந்தது. தீவிர ஊழிய வாஞ்சை கொண்டிருந்த சங்கை ஹென்றி டோலர் ஐயரோ ஒரு இடத்தில் முடங்கிக் கிடக்காமல் தொடர்ந்து சமய சமூக தொண்டாற்றி வந்தார். இந்நிலையில் கொடிய காலரா நோய் டோலர் ஐயரைப் பற்றிக்கொண்டது. போதுமான மருத்துவ வசதிகள் இல்லாத அந்த காலத்தில் ஐயரின் உயிரை இந்த நோயின் மரணப்பிடியிலிருந்து காப்பாற்ற முடியவில்லை! மார்ச் மாதம் 15 ஆம் நாள் 1870 ஆம் ஆண்டு தான் தீவிரமாகவும், அதிக வாஞ்சையுடனும் ஊழியம் செய்துவந்த தனது பரம எஜமானரின் கைகளில் தனது ஜீவனை ஒப்படைத்து ஓய்ந்தார். அவரது ஜென்ம சரீரம் லண்டன் மிஷன் திருத்தொண்டர்கள், அரசு அதிகாரிகள், சுதேச விசுவாசிகள், என அனைவரும் அதிர்ச்சியில் உறைய சேலம் பழைய ஆங்கிலேயர் கல்லறைத் தோட்டத்தில் உயிர்த்தெழும் நாளுக்காக விதைக்கப்பட்டது.

**திரும்பிப் போன மனைவி :**

அவரது இளம் மனைவியோ கணவனை இழந்த கைம்பெண்ணாக நிர்கதியாய், நிராதரவாய், ஒரு அந்நிய தேசத்தில் ஆற்றித் தேற்ற, ஆதரவு கொடுக்க, யாருமின்றி சென்னைப் பட்டணம் போய்ச் சேர்ந்தார். சேலம் சுகாதாரமற்ற, ஆங்கிலேயர்கள் வாழ தகுதியற்ற, ஒரு ஸ்தலமாக மாறிவிட்டது என லண்டன் மிஷன் நிர்வாகிகள் முடிவெடுத்திருந்தனர். சேலம் மிஷனெரிமார்களின் கல்லறைத் தோட்டமாக மாறிவிட்டது என்று சொல்லி ஆங்கிலேய மிஷனெரிமார்கள் சேலம் மிஷனை ஆற்காடு லூத்தரன் மிஷனுக்கு தாரை வார்த்துவிடவும் துணிந்திருந்தார்கள்.

இந்த நிலைமைகளில் சென்னைச் சென்ற டோலர் ஐயரின் மனைவி தான் 4 மாதம் கணவனுடன் பயணித்து இந்தியா வந்த அதே வியாபாரக் கப்பலில் ஏறி பயணப்பட்டு தன் தாய்நாடு திரும்பிச்




சென்ற சோகக்கதையை என்ன சொல்ல! ஏன் இந்த துயரம் இந்த இளம் தம்பதியருக்கு வரவேண்டும்? இது தோல்வியா? இல்லை! தோல்வி போல தோன்றுவதெல்லாம் உண்மையில் தோல்விகள் அல்ல! அவை வெற்றிகளுக்கு நம்மை அழைக்கும் சவால்கள்! சங்கை டோலர் ஐயரும் கல்லறையில் சும்மா இராமல் நமது நினைவுகளில் நீங்கா இடம்பெற்று விசுவாசத்திற்காக மிகுதியான பலன்களை எதிர்பார்க்க நம்மை ஏவுகிறார். நமது முயற்சிகளை கிறிஸ்துவின் சுவிசேஷ பிரபல்லியத்திற்கு ஏதுவாக இருக்க பண்படுத்துகிறார்.

சேலத்தில் கிறிஸ்துவின் ஊழியத்தை செய்ய வந்து தங்கள் காலத்திற்கு முன்பே மரணத்தை அடைந்த இயேசுவின் திருத் தொண்டர்களின் நினைவுகளை சொல்லிக் கொண்டிருக்கும் சேலம் பழைய ஆங்கிலேயர் கல்லறைத் தோட்டத்தில் சங்கை ஹென்றி டோலர் ஐயர் அடக்கமான இடத்தில் சேலம் கிறிஸ்தவ விசுவாசிகள் அவர் நினைவாக ஒரு கம்பீரமான கல்லறை ஸ்தூபியை எழுப்பியுள்ளனர்.

சேலம் மக்களுக்கு கிறிஸ்துவின் நற்செய்தியை அறிவிக்க வந்து அதற்காகவே தன் உயிரை தியாக பலியாக அர்ப்பணித்துவிட்ட சங்கை ஹென்றி டோலர் ஐயரின் கம்பீரமான கல்லறையை பார்க்கும் போதெல்லாம் எனக்கு ஒரு வசனம் நினைவிற்கு வரும் அது: **'கோதுமை மணியானது நிலத்தில் விழுந்து சாகாவிட்டால் தனித்திருக்கும், செத்ததேயாகில் மிகுந்த பலனைக் கொடுக்கும்' –** யோவான் 12:24.

**சேலம் வரலாற்றுச் சங்கம்**
**ஜே.பர்னபாஸ்,**

# புத்தக வெளியீட்டு விழா



வரலாற்று பேராசிரியர் அருள்திரு D.A கிறிஸ்துதாஸ் ஐயரவர்கள் 1976 ஆம் ஆண்டு எழுதிய தாவீது சுந்தரானந்தம் வரலாற்று நூலின் மறுபதிப்பு புத்தகம் வெளியீடு

திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம் மற்றும் முதலூர் திருச்சபையினரின் முயற்சியினாலும், நன்கொடையாளர்களின் உதாரணமான நன்கொடையினாலும், வரலாற்றுச் சங்க உறுப்பினர்களின் ஆதரவினாலும், ஈஸ்டர் இரவு (17.04.2022) அன்று முதலூர் அருட்தொண்டர் தாவீது சுந்தரானந்தம் அரங்கில் வைத்து வெளியிடப்பட்டது.

முதலூர் சேகரத்தலைவர் அருள்திரு . P. ஏசுவடியான் துரைசாமி அவர்கள் புத்தகத்தை குறித்த அறிமுகத்தை வழங்கினார்கள். அதன் பின்பு வரலாற்றுச் சங்க உறுப்பினர் மற்றும் பேராசிரியர் திரு G. சுரேஷ் சாலமோன் ஐயா அவர்கள் வாழ்த்துரை வழங்கினார்கள்.

அருள்திரு . P. ஏசுவடியான் துரைசாமி ஐயா அவர்கள் ஜெபித்து, ஆசீர்வதித்து முதல் பிரதியை வெளியிட, சேகர பொருளாளர் திரு. Z. சாந்தராஜா ரத்தினராஜ் அவர்கள் பெற்றுக் கொண்டார்கள். இரண்டாவது பிரதியை திரு A.K.S. சுந்தர் அவர்கள் வெளியிட திரு G. பாக்கியராஜ் அவர்கள் பெற்றுக் கொண்டார்கள். மூன்றாவது பிரதியை வரலாற்று சங்க நிர்வாகி மன்னா செல்வகுமார் வெளியிட திரு. ஜேம்ஸ் லாசரஸ் அவர்கள் பெற்றுக் கொண்டார்கள்.

முதலூர் மண்ணின் மைந்தனும் வரலாற்றுச் சங்க உறுப்பினருமான திரு S. அபிஷேக் அவர்கள் நன்கொடையாளர்களுக்கும், இந்த புத்தகத்தை மறுபதிப்பு செய்து வெளியிட உதவிய பேராசிரியர் D.A.கிறிஸ்துதாஸ் ஐயா அவர்கள் குடும்பத்திற்கும், முதலூர் சேகர குருவானவர் மற்றும் கமிட்டி உறுப்பினர்களுக்கு நன்றி கூறினார்கள்.

அருட்தொண்டர் தாவீது சுந்தரானந்தம் அவர்களின் 250 வது ஆண்டு பிறந்த ஆண்டில் அவரது வரலாற்றை மீண்டும் வெளியிடுவதில் வரலாற்றுச் சங்கம் மகிழ்கிறது. இந்த வரலாற்று புத்தகம் வெளிவர ஜெபித்த, உழைத்த, கொடுத்த மற்றும் கலந்து கொண்ட அனைத்து சபை மக்களுக்கும் குறிப்பாக ஞாயிறு பாடசாலை ஆசிரியர்கள், குழந்தைகள் யாவருக்கும் வரலாற்றுச் சங்கத்தின் சார்பாக அன்பின் வாழ்த்துக்களையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கின்றோம்.



### மிஷனெரிகள் எதிர்கொண்ட சாதியப் படிநிலைகள் சார்ந்த

# சிக்கல்களும் விளைவுகளும்

***சாதியப் படிநிலைகள் ஓர் அறிமுகம்***

ஆரியர் வருகைக்கு முன்பாக சாதியம் மற்றும் சாதியப் படிநிலைகள் சார்ந்த ஏற்றத்தாழ்வுகள் தமிழகத்தில் இல்லை.

சங்க காலத்திற்குப் பின் ஆரியர் வருகையும் அவர்களது ஆதிக்கமும் தமிழகத்தில் ஏற்பட்ட போது தொழில் அடிப்படையில் காணப்பட்ட வேறுபாடு பிறப்பின் அடிப்படையிலான வேறுபாடாக மாறியது. ஆரியர்களிடம் காணப்பட்ட பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் எனும் நான்கு வர்ண சாதிய படிநிலையின் தாக்கம் தமிழகத்திற்குள்ளும் ஊடுருவியது.

மனுநூல் 1:87 இன் படி 'பிரம்மாவின் முகத்திலிருந்து பிராமணர்களும் தோள்பட்டையிலிருந்து சத்திரியர்களும் தொடையிலிருந்து வைசியர்களும் பாதத்திலிருந்து சூத்திரர்களும் தோன்றினர்'.

சாதிக்குள்ளேயே திருமணம் என்ற அகமண முறையை மனுதர்மம் வலியுறுத்துகிறது.

வட இந்தியாவைப் போல தமிழகத்தில் நான்கு வர்ண சாதிப் படிநிலை இல்லாமல் பிராமணர், வேளாளர் பிற்பட்ட / மிகவும் பிற்பட்ட வகுப்பினர், தாழ்த்தப்பட்ட வகுப்பினர் என்ற அளவில் சாதிப்படிநிலை காணப்பட்டது. தமிழகத்தில் சங்க காலத்திற்குப் பின்பு பிற்கால சோழர்கள், பிற்காலப் பாண்டியர்கள் காலகட்டத்தில் படிப்படியாக சாதிய ஏற்றத்தாழ்வுகள் வளர்ந்து விஜயநகர நாயக்க மன்னர்கள் காலத்தில் அது உச்சகட்டத்தை நோக்கி சென்றது. தற்போதைய தமிழகத்தின் குமரி மாவட்டம் திருவாங்கூர் சமஸ்தானத்துடன் இருந்தது. அங்கு சாதிய ஏற்றத்தாழ்வுகள் மிக அதிகமாக இருந்தது. இப்படிப்பட்ட காலகட்டத்தில் தான் கிறிஸ்தவ நற்செய்தியை அறிவிக்க கத்தோலிக்க மற்றும் சீர்திருத்த கிறிஸ்தவ மிஷனரிகள் தமிழகத்திற்குள் வந்தனர்.

**சாதிப் படிநிலைகளும் கத்தோலிக்க கிறிஸ்தவமும்**

**தூய சவேரியார்**

தமிழகத்திற்கு முதல் கத்தோலிக்க மிஷனரியாக வந்தவர் தூய சவேரியார் என்றழைக்கப்படும் St.பிரான்சிஸ் சேவியர் ஆவார். தற்போதைய தமிழக கத்தோலிக்க கிறிஸ்தவத்தின் அடித்தளம் அவரது நற்செய்திப் பணியே. தூய சவேரியார் தமிழ் மொழியை முழுமையாக கற்றுக் கொள்ளவில்லை ஓரளவு அறிந்திருந்தார். பத்து கட்டளைகள், கர்த்தருடைய ஜெபம், விசுவாச பிரமாணம், அருள் நிறைந்த மரியே ஜெபம், சிலுவை வரைதல் போன்றவற்றை தமிழில் கற்றுக் கொடுத்தார். தமிழகத்தில் மொழிப் பிரச்சினை காரணமாக நேரடியாக தமிழருடன் தொடர்பு கொள்ளவில்லை.



தொடர்பு கொள்வதற்காக தம்மோடு கூட எப்பொழுதும் மொழிபெயர்ப்பாளர்களை வைத்திருந்தார். தூய சவேரியார் ஸ்பானிஷ் மற்றும் போர்ச்சுகீசிய மொழியில் எழுதிய கடிதங்களில் தமிழக சாதிய ஏற்றதாழ்வுகள் அவற்றில் சபையின் நிலை குறித்த குறிப்புகள் இல்லாததால் அக்கால நிலையை நாம் அறிய இயலவில்லை.

**போதகர்.ஹென்றி ஹென்றிக்ஸ்**

தூய சவேரியார் அவர்களைத் தொடர்ந்து தமிழகத்தில் நற்செய்தி பணியாற்ற வந்த இயேசு சபை போதகர் ஹென்றி ஹென்றிக்ஸ் (1520-1600) ஆவார். இந்தியாவின் முதல் அச்சுக்கூடம் நிறுவியவரான இவரது குறிப்புகளில் தமிழக சாதிப் படிநிலையில் முதல் நிலையில் இருந்த திருச்செந்தூரில் வாழ்ந்த பிராமணர்கள் மூன்றாம் படி நிலையில் இருந்த திருச்செந்தூரில் பெருமளவில் வசித்துவந்த கிறிஸ்தவ மீனவ பரதவ சமூகத்தினர் இடையே எழுந்த சாதிய சிக்கல் பற்றி அறிய முடிகிறது.

1578 இல் திருச்செந்தூரில் பிராமணர்கள் அதிகம் வாழ்ந்த தெருவிலுள்ள கிணற்றில் கிறிஸ்தவ மீனவ இளைஞர் மீனைப் பிடித்து போட்டு அசுத்தம் செய்தார் என்ற பழியைச் சுமத்தி திருச்செந்தூரில் செல்வச் செழிப்போடு வாழ்ந்த கிறிஸ்தவ மீனவர்கள் அனைவரையும் பிராமணர்கள் விரட்டி விட்டதோடு தேவாலயத்தையும் இடித்து தள்ளி தேவாலய சொத்துக்களையும் பறிமுதல் செய்த சம்பவத்தை தம் கடிதத்தில் ஹென்றிக்ஸ் குறிப்பிடுகிறார். கிறிஸ்தவர்களை

காப்பாற்ற வட இலங்கை மன்னாரிலிருந்து போர்த்துக்கீசிய படை வரவழைக்கப்பட்டது. போதகர் ஹென்றிக்ஸிற்கும் பிராமணரிடமிருந்து பலமான அச்சுறுத்தல்கள் கொடுக்கப்பட்டதை அவரது கடிதம் மூலம் அறிகிறோம்.



**தத்துவ போதகர். இராபர்ட் டி நொபிலி**

மதுரை மிஷன் என்ற மறைமாநிலம் உருவாக காரணமானரும் சாதியம் உச்சகட்டத்தில் இருந்தபோது இயேசு சபை போதகராக மதுரையை மையமாகக் கொண்டு நற்செய்தி பணியாற்ற வந்தவர் போதகர்.இராபர்ட் டி நொபிலி. அவர் சாதிப் படிநிலைகளை எதிர்க்காமல் இந்து மதத்தை போன்று அவற்றோடு சமரசம் செய்து உயர் வகுப்பினருக்கு தனி போதகர்கள், தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு தனி போதகர்கள், தனித்தனி வழிபாட்டு இடங்கள், தமக்கு சமையல் செய்ய உயர்வகுப்பு சமையல்காரர்கள் உயர்வகுப்பு ஆடை அலங்காரங்கள். உயர் வகுப்பினர் இயேசுவை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்ற நல்ல நோக்கத்திற்காக இதை அவர் செய்திருந்தாலும் கிறிஸ்தவம் காட்டிய சமத்துவ சமநிலையை இவர் நிலைநாட்டவில்லை என்ற கெட்ட பெயரையே பெற்றுள்ளார்.

**வீரமாமுனிவர்**



கான்ஸ்டான்சியஸ் ஜோசப் பெஸ்கி என்ற பெயரைக் கொண்ட இவர் இத்தாலி நாட்டில் காஸ்திகிளியோன் எனும் ஊரில் 08.11.1680 இல் பிறந்து 1709 இல் குரு அருட்பொழிவு பெற்று 1710 இறுதியில் லிஸ்பனிலிருந்து கப்பல் மூலம் புறப்பட்டு கோவா வந்து அங்கிருந்து கொச்சி அம்பலக்காடு சம்பாலூர் வந்து சேர்ந்தார். அங்கிருந்து திருநெல்வேலி வட்டாரத்தைச் சார்ந்த காமநாயக்கன்பட்டியில் 08.05.1711 இல் துணைக் குருவாக பொறுப்பேற்றார் பின் திருச்சி, வரதராஜன்பேட்டை, குருக்கள்பட்டி, கயத்தாறு, குருவிநத்தம், திருக்காவலூர் எனும் ஏலாக்குறிச்சி, புறத்தாக்குடி, மணப்பாடு, பெரியதாழை, வேம்பார் ஆகிய இடங்களில் பணிசெய்து 1746 இல் முதலில் வந்த இடமாகிய அம்பலக்காடு சம்பாலூரில் இளம் குருமடத்தின் தலைவராக பணி செய்கையில் 04.02.1747 இல் மரணமடைந்தார். சாதியம் வலுப்பெற்றிருந்த அந்த காலகட்டத்தில் இவர் நோபிலியைப் போன்று சாதிய படிநிலைகளை ஏற்று உயர் வகுப்பினரோடு இவர் சமரசமாக சென்றதையே பார்க்கிறோம்.

**தந்தை. ட்ரிங்கால்**

தமிழில் வேதாகமத்தை மொழி பெயர்த்த போதகரான ட்ரிங்கால் வத்திராயிருப்பு அருகில் உள்ள புதுப்பட்டி, மேல கோபாலபுரம் மற்றும் சுற்று கிராமங்களிலும் ராஜபாளையத்தை அடுத்துள்ள சுந்தரநாச்சியார்புரத்திலும் ஊழியம் செய்தவராவார். புதுப்பட்டி மற்றும் சுற்றுவட்டார கிராமங்களில் சாதிப் படிநிலையால் பாதிக்கப்பட்டிருந்த நான்காம் படிநிலை பறையர் சமூகத்தை ஆதிக்க சாதிகளிடமிருந்து பாதுகாத்து உயர்வை பெற்றுக்கொடுத்தார். இவர் பெயரை புதுப்பட்டி மேல்நிலைப்பள்ளிக்கு சூட்டியுள்ளனர் சுந்தரநாச்சியார்புரத்தில் சாதிப் படிநிலையாக்கத்தில் மூன்றாம் நிலையில் இருந்த பிற்பட்ட நாடார் சமூகத்தினரை அருகிலிருந்த கொல்லங்கொண்டான் ஜமீன்தார் ஒடுக்கி வந்தார். இவர்களது ஊர் நிலங்கள் வயல் நிலங்கள் பனைமரக்காடுகள் அனைத்தும் ஜமீன்தார் பெயரில் இருந்தது. இக்கிராமத்தார் தங்களுக்கு உதவி செய்யும்படி ட்ரிங்காலை அணுகினர். ஜமீன்தாருக்கு பணம் கொடுத்து அனைத்து நிலங்களையும் கையகப்படுத்திய இவர் ஏழை சமூகத்தினருக்கு அனைத்தையும் அன்பளிப்பாக வழங்கினார்.

**தந்தை கௌசானல் (1850-1930)**



சாதியம், சாதிப் படிநிலை ஆகியவற்றை மிக வலிமையாக எதிர்த்தவர் தந்தை கௌசானல். வடக்கன்குளத்தில் புனித அருளானந்தரால் கட்டப்பட்ட ஓலைக்கூரை வேயப்பட்ட கோயில் அகற்றப்பட்ட பின் 1752 இல் கிழக்கு திசை நோக்கி கட்டப்பட்ட அந்த திருக்குடும்ப தேவாலயத்தில் சாதிப் படிநிலையில் இரண்டாம் நிலையில் இருந்த வேளாளர்களுக்கும் மூன்றாம் நிலையில் இருந்த நாடார்களுக்கும் தனித்தனியாக தென்புறம், வடபுறம் என இடங்கள் ஒதுக்கப்பட்டு இருவரும் அமரும் இடங்களுக்கு இடையே தடுப்புச்சுவர் அமைக்கப்பட்டது.

பீடப் பணியாளர் போன்ற முக்கியமான பொறுப்புகள், தேவாலய திருவிழா முன்னுரிமை போன்றவை வேளாளர்களுக்கே கொடுக்கப்பட்டது. இதை எதிர்த்து நாடார்கள் 1872 முதல் போராடத் தொடங்கினர். வடக்கன் குளத்தில் பங்கு தந்தையாக பணிசெய்த கௌசானல் சாதிப் படிநிலையை எதிர்த்ததோடு திருச்சி ஆயரின் ஆணையைப் பெற்று தேவாலயத்திற்குள் இரு தரப்பாரையும் பிரிக்கும்படி கட்டப்பட்டிருந்த தடுப்புச் சுவரை 22.10.1910 இல் இடிக்க கட்டளையிட்டார் அதனுடைய சுவர் இடிக்கப்பட்டது. அதனால் பெரிய எதிர்ப்பையும் சம்பாதித்தார். அவற்றையெல்லாம் முறியடித்து சபையிலும் தேவாலயத்திலும் அனைவரும் சமம் என்ற நிலையை ஏற்படுத்தினார்.

மேலும் கழுகுமலையில் பிற்பட்ட கிறிஸ்தவ சமூகத்தினரை ஆதிக்கம் செலுத்தி அவர்களுக்கு எதிராக வழக்கு தொடுத்த உயர் வகுப்பினரை எதிர்கொள்ள மிகச்சிறந்த வழக்கறிஞரை ஒழுங்கு செய்து வழக்கில் வெற்றி பெற வைத்தார்.

## *சாதிப் படிநிலைகளும் சீர்திருத்த கிறிஸ்தவமும்*

**போதகர்.சீகன்பால்க் (1682-1719)**

முதல் சீர்திருத்த கிறிஸ்தவ மிஷனரிகளாக தமிழகம் வந்த சீகன்பால்க் மற்றும் புளுச்சோ இருவரும் சாதிப்



படிநிலைகளையும் அதைச் சார்ந்த சாதிய ஏற்றத்தாழ்வுகளையும் வலிமையாக எதிர்த்தார்கள் அக்காலத்தில் சாதிப் படிநிலையில் இரண்டாம், மூன்றாம், நான்காம் படிநிலைகளிலிருந்த வேளாளர், பிற்பட்டோர் மற்றும் தாழ்த்தப்பட்ட சமூகத்தினர் என அனைவரும் இவர்கள் மூலம் கிறிஸ்தவர்களானார்கள் அனைவருமே இவர்களால் சமமாக நடத்தப்பட்டனர்.

சீகன்பால்க் மொழிபெயர்த்த பைபுள் மொழிபெயர்ப்பு (1714) தாழ்த்தப்பட்டோர் பேசும் மொழி நடையில் இருந்ததாகக் கூறி அதை தாழ்த்தப்பட்டோர் வேதம் என பிறர் ஏளனம் செய்தனர். ஆனாலும் சீகன் பால்கு ஒருபோதும் ஆதிக்க சாதியினரிடம் சமரசம் செய்து கொள்ளவில்லை. அவர் நடத்திய உண்டு உறைவிட பள்ளியில் அனைத்து சாதியினரும் ஒன்றாக அமர்ந்து சாப்பிடவும் ஒன்றாக தங்கிடவும் செய்து சமத்துவத்தை நிலைநாட்டினார்.

### தந்தை. சுவார்ட்ஸ் ஐயர்



தந்தை சுவார்ட்ஸ் ஐயரவர்களின் காலத்தில் தமிழகத்தில் சபைக்குள் சாதிப் படிநிலைகள் சாதிய ஏற்றத்தாழ்வுகள் எந்த அளவில் இருந்தது என்பதை அறிய வேதநாயகம் சாஸ்திரியார் அவர்களது வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புகள் துணை செய்கிறது.

சீகன்பால்குக்கு பின்னர் தமிழ்நாட்டிற்கு வந்த சீர்திருத்த ஆங்கிலிக்கன் மற்றும் லுத்தரன் கிறிஸ்தவ மிஷனரிகள் தமிழகத்தின் அக்காலத்து கலாச்சாரம் பாதிக்கப்படாத வகையில் சாதிப் படிநிலையில் இருந்த நான்கு படிநிலை சமூகத்தவர்களும் கிறிஸ்தவ நற்செய்தியை ஏற்க வேண்டும் என்பதற்காக சொந்த சாதிக்குள்ளேயே நடைபெறும் அகமணமுறை, தங்கள் சாதியினரோடே நெருக்கமாக பழகுவது என அக்கால தமிழர்களின் வாழ்வியல் வழியிலேயே சென்று நற்செய்தி அறிவிப்பது என்ற நிலையை சுவார்ட்ஸ் ஐயரவர்கள் காலத்தில் கடைப்பிடித்தனர். தஞ்சாவூர் தேவாலயத்தில் ஒவ்வொரு சாதியினரும் தேவாலயத்திற்குள் தாங்களாகவே குறிப்பிட்ட இடத்திற்குள் அமர்ந்து கொண்டனர்.

சாதிப் படிநிலைப்படி உயர்நிலையினர் திருவிருந்தில் முதலாவதாகவும் அவர்களுக்குப் பின்னர் தாழ்த்தப்பட்டோரும் பங்கு பெற்று வந்தனர். இந்த நிலைமையை சுவார்ட்ஸ் ஐயரவர்கள் மாற்றவில்லை. உயர் வகுப்பினர் நற்செய்தியை அறிய வேண்டும் என்பதற்காக உயர் வகுப்பினரையே சமையல்காரராக தமக்கு நியமித்திருந்தார். ஆனால் சுவார்ட்ஸ் ஐயரவர்களுக்குப் பின் சற்று பின்னர் வந்த கனம். L. P. ஆபரோ ஐயரவர்கள் தேவாலயத்தில் சபை மக்கள் அனைவரும் தனித்தனியே சாதிப்படிநிலைப்படி அமராமல் கலந்து அமரவும், திருவிருந்தில் பங்கு பெறுவதில் முன்னர் செல்வது பின்னர் செல்வது என்ற சாதிப் பாகுபாடு இல்லாமல் அனைவரும் ஒன்றாகக் கலந்து சென்று பங்கு பெறவும் ஆணை பிறப்பித்தார். போதகரின் இந்த ஆணையால் தஞ்சாவூர் சபையில் குழப்பம் ஏற்பட்டு உயர் வகுப்பினர் ஆலய ஆராதனையில் பங்கெடுப்பதை புறக்கணித்தனர்.

வேதநாயக சாஸ்திரியாரின் ஆலோசனையை கேட்பது என நினைத்த ஆபரோ ஐயரவர்கள் சாஸ்திரியாரின் வீட்டிற்குச் சென்றார் சாஸ்திரியாரின் அபிப்பிராயத்தைக் கேட்டார் சாஸ்திரியார் ஆபரோ ஐயரவர்களைப் பார்த்து 'ஐயா நீங்கள் செய்ய நினைப்பது சரியே ஆனாலும் சபை பாலுண்கிற குழந்தை நிலையில் தான் உள்ளது அதற்குத் தாங்கள் கடின உணவை கொடுக்கிறீர்கள் அது செரிக்காது அதனால் ஏற்கனவே இருந்த முறைப்படி தேவாலயம் நடக்கட்டும் நீங்கள் கட்டாயப்படுத்த வேண்டாம் தந்தை சுவார்ட்ஸ் ஐயரவர்கள் பின்பற்றிய வழியை பின்பற்றுங்கள். கல்வி, வேத அறிவு, நாகரிகம் வளரும்போது சாதி வேற்றுமை ஒழிந்து சமத்துவ நிலை தானாகவே வந்துவிடும்' எனக் கூறினார். சாஸ்திரியாரின் பதில் ஆபரோ ஐயரவர்களுக்கு திருப்தியாக இல்லை.



நீர் உம்முடைய குலத்தவருக்கு ஆதரவாக பேசுகிறீர் என சாஸ்திரியாரிடம் ஐயரவர்கள் கூற இருவரிடையே கருத்துவேறுபாடு முற்றியது. ஆலயத்தை புறக்கணித்தவர்கள் விசுவாசத்தை விட்டு விலகி பிற மார்க்கத்திற்கு சென்றுவிடக்கூடாது என்பதற்காக சாஸ்திரியார் அவர்களுக்காகத் தனது வீட்டிலேயே ஆராதனை நடத்தினார். இக்காரியத்தை முன்னிட்டு சாஸ்திரியாரை பேராயர் ஸ்பென்சர், ஜி யு போப், ஆபரோ ஐயரவர்கள் சாதிவெறியராக கருதினர். .

வேதநாயகம் சாஸ்திரியாருக்கு மாதம் தோறும் திருச்சபை கொடுத்துவந்த உபகாரச் சம்பளத்தை இச்சம்பவத்தால் திருச்சபை நிறுத்தியது. சாஸ்திரியார் வறுமை நிலையை அடைந்தார். தன்னோடு சுவார்ட்ஸ் ஐயரவர்கள் வீட்டில் வளர்ந்தவரான சரபோஜி அரசரிடம் உதவி கேட்டு சென்றார் அவரது அரசவையில் அரசவை கவிஞர் பொறுப்பை சாஸ்திரியார் ஏற்றார். 3 ஆண்டுகள் அப்பொறுப்பில் அவர் இருந்தார்.

### நெல்லை அப்போஸ்தலர் கனம். ரேனியஸ் ஐயர்

கனம். ரேனியஸ் ஐயரவர்கள் புதிதாக உருவாக்கப்பட்ட பாளையங்கோட்டை C.M.S பணிதளத்தின் தலைமை மிஷனரியாக 1820 இல் பொறுப்பேற்றபோது ஏற்கனவே ஹாப்வ் ஐயரவர்கள் காலம் முதல் நடந்து வந்த ஆசிரியர் மற்றும் சபை ஊழியர்களை பயிற்றுவித்து உருவாக்கும் செமினரியில் வேளாள மாணவர்களே கற்று வந்ததைக் கண்டார். அக்கால திருநெல்வேலி மாவட்டத்தில் பெரும்பான்மையாக இருந்து நற்செய்திக்கு செவிசாய்த்து வந்த நாடார் மாணவர்கள் செமினரியில் இல்லை என்பதை என்பதை கண்டறிந்தார் அந்த சமூக மாணவர்கள் சேர்க்கப்பட்டால் திருநெல்வேலி மாவட்டத்தை நற்செய்திக்குள் கொண்டுவரும் தமது திட்டம் நிறைவேறும் என்பதை உணர்ந்தார். 1821 இல்

சேர்ந்த ஏழு மாணவர்களும் வேளாள மாணவர்களாக இருந்தனர். 20 மாணவர்களை சேர்த்துக் கொள்ளலாம் என செயற்குழு ரேனியசுக்கு அனுமதி அளித்ததால் மீதமுள்ள 13 பேரையும் வேறு சமூகத்திலிருந்து சேர்க்க எண்ணினார். உடனடியாக 13 பேர் சேர்ந்தார்கள். அதில் 10 பேர் நாடார்கள் 3 பேர் ஆதிதிராவிடர்கள். முதல் படிநிலையை சார்ந்த 7 பேரும் பின்னர் சேர்ந்த 13 பேரோடு இணைந்து சாப்பிடுவதை இழுக்காக எண்ணி 13 பேரும் சாப்பிட்டு சென்ற பின்னர் சாப்பிட்டனர். இதைக் கண்ட ரேனியஸ் சாதி வித்தியாசம் பார்ப்பது மிகப்பெரிய தவறு. அனைவரும் ஒன்றாக சேர்ந்து சாப்பிட வேண்டும் என்பதை ஆராதனை வேளையில் வலியுறுத்தினார். ஆனால் 7 பேரும் தாங்கள் அவ்வாறு சாப்பிட்டால் தங்களை தங்களது சொந்த சாதியில் இருந்து நீக்கிவிடுவார்கள் எனக்கூறி கண்ணீர் விட்டு அழுதனர். சேர்ந்து சாப்பிட மறுத்து விட்டனர் மறு நாள் காலையிலும் மதியமும் சாப்பிடாமல் பட்டினி கிடந்தனர். ரேனியஸ் அவர்களது பெற்றோரை அழைத்து பேசினார். பெற்றோர் சாப்பாட்டறையில் இருதரப்புக்கும் இடையே பிரிவினை சுவர் ஒன்றை எழுப்பி விடுங்கள் என வேண்டுகோள் விடுத்தனர். இதைக்கேட்ட நாடார் மாணவர்கள் தங்களுக்கும் ஆதிதிராவிட மாணவர்களுக்கும் இடையில் தடுப்பு சுவர் அல்லது தடுப்பு தட்டிமறைவு வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்தனர் இவற்றையெல்லாம் உற்று நோக்கி பார்த்த ரேனியஸ் அந்த செமினரியை உடனடியாக மூடி விட்டார். மறு ஆண்டு அனைவரும் செமினரியைத் திறக்க வேண்டும் தாங்கள் கல்வி பயில வேண்டும் என வேண்டுகோள் விடுத்தபோது சாதி வேறுபாட்டை எந்த வடிவத்திலும் கடைபிடிக்க மாட்டோம் என உறுதிமொழியை எழுத்துப்பூர்வமாக கொடுப்பவர்களை மாத்திரமே சேர்ப்பது என கண்டிப்புடன் ரேனியஸ் கூறிவிட்டார். அதை ஏற்றுக் கொண்டவர்களைக் கொண்டு 1822 மே மாதம் செமினரி மீண்டும் திறக்கப்பட்டது. தமிழகத்தின் சாதிப் படிநிலைகள் எப்படிப்பட்ட தாக்கத்தை எல்லாம் கிறிஸ்தவத்திற்குள் கொண்டு வந்துள்ளது என்பதை அறிந்து கொண்ட நாம் சாதி பேதமற்ற கிறிஸ்தவம் உருவாக பாடுபடுவோம்.



**ஞா.ஜான் ஞானராஜ்**
கல்லிடைக்குறிச்சி

# இயற்கையோடு இறைவன்

தூத்துக்குடி மாவட்டம் உடன்குடி அருகில் உள்ளது பண்டாரஞ்செட்டிவிளை என்ற கிராமம் அங்கு உள்ள தென் இந்திய திருச்சபை தூய லூக்கா ஆலயத்தில் அருட்பணியாளராக பணி செய்து வருகின்றவர் இவர் அனைத்து அருட்பணியாளர்களுக்கும் எப்போதுமே முன்மாதிரியாக செயல்படுகின்றவர் இவர் மிகச்சிறந்த வரலாற்றுச் ஆய்வாளர்.

இந்த ஆண்டு நடைபெற்ற குருத்தோலை பவனி மற்றும் ஞாயிறு ஆராதனையின் பொழுது ஆல்ட்டரில் வழக்கமான துணி அலங்காரத்திற்கு பதிலாக முதன்முறையாக பனையோலை பாய்களைப் பயன்படுத்தி அலங்கரிக்கப்பட்டிருந்தது. பிளாஸ்டிக் பயன்பாட்டிற்கு எதிராக இது ஒரு புதிய முயற்சி ஆகும். வழிபாட்டின் போது துணியினால் அணியப்படும் ஸ்டோல் என்ற புனித ஆடையினையும் பனையோலையினால் செய்து அலங்காரமாக அணிந்திருந்தார். தோத்திரக்காணிக்கை சேகரிக்க பயன்படுத்தும் பித்தளை தட்டிற்குபதிலாக பனையோலையினால் செய்யப்பட்ட வட்ட பிளா பயன்படுத்தப்பட்டது. பிளாஸ்டிக் மற்றும் துணி அலங்காரத்தினை முழுவதுமாக ஒதுக்கி பனையோலையினால் செய்யப்பட்ட அலங்காரம் இயற்கையோடு இறைவனின் சத்தத்தைக் கேட்டு அர்ப்பணிக்க தூண்டியது.









தமிழ் நாட்டின் தனிப்பெரும் நாவலாசிரியர்

## அ மாதவையா அவர்களின்

# கிளாரிந்தா

**தமிழ்நாட்டில் வெளி வந்த முதல் வரலாற்று நாவல்**

**தொடர் –14**

சமாதானம் ஆனதும் முதல் வேலையாக கமலாபாய், பெண்மைக்குரிய ஆவலோடு, கடிதத்தில் கிளாவிருந்தா என்ன எழுதியிருந்தாள் என்று கேட்டாள். கடிதத்தை அவர் அவளுக்கு வாசித்துக் காண்பித்தார். அவளும் வியந்தாள். எனினும் தான் முடிக்கவேண்டிய கர்மமும் தன் காரியமும் அவளுக்கு நினைவு வந்தன. ஆகவே, 'இந்தச் சின்னப் பெண்ணுக்கு இத்தனை துணிச்சலா? ராஜியத்துக்குப் பிரதானர் ஆகக்கூடியவர் என்று உலகமெல்லாம் சொல்லுகிறதே, அப்பேர்ப்பட்ட கணவரைவிடத் தனக்கு ரொம்பத் தெரியும் என்ற எண்ணமோ?' என்று அவளை வன்மையாக கண்டனம் செய்தாள்.

தான் குற்றமற்றவள் என்று அவரை நம்பவைப்பதற்காகவே சூழ்ச்சியாக சுவிகாரத்தை எதிர்க்கிறாள் என்றும் சொன்னாள். இதுதான் சமயம் என்று தன் ஒன்றுவிட்ட சகோதரனின் மகனைத் தத்து எடுக்கும்படியாகவும் அவரிடம் மன்றாடத் தொடங்கினாள்.

உங்களுக்காக நான் என் மானத்தையே காவு கொடுத்திருக்கின்றேன். என் வாழ்க்கையின் பெரும்பாகத்தை இந்த வீட்டில் உங்கள் நலத்துக்காகவும் இன்பத்துக்காகவும் மட்டுமே செலவிட்டுவிட்டேன். துரதிர்ஷ்டசாலி, கங்காவுக்கு ஆண் குழந்தை பிறக்கும், அதனால் இந்த வீட்டில் என் நிலை ஸ்திரமாகும். வயது காலத்தில் அவமானமும் தரித்திரமும் எதிர்நோக்காது என்று நம்பிக்கொண்டே இருந்தேன். ஆனால் விதி வேறுவிதமாக இருந்துவிட்டது. என்னதான் இருந்தாலும், அத்திம்பேரே, நீங்களும் ஒருநாள் போகவேண்டியவர் தாம். உங்கள் உடல் நலமும் திருப்திகரமாக இல்லை. உங்களுக்காக நான் எத்தனை கவலைப்பட்டிருப்பேன் தெரியுமா? நீங்கள் உயிர் பிழைக்க வேண்டுமே என்று விடிய விடிய விழித்திருந்து அழுது மன்றாடிப் பிரார்த்தித்தது, அந்த ஆண்டவனுக்குத்தான் தெரியும். நீங்கள் உங்கள் தம்பி பிள்ளையை சுவிகாரம் செய்து, பின் உங்களுக்கு ஏதாவது நேர்ந்தது என்றால் என் நிலைமை என்ன ஆகும் என்று கொஞ்சம் நினைத்துப் பாருங்கள். உங்கள் பிணத்தை அப்புறப்படுத்துமுன்னரே உங்கள் தம்பி என்னைத் தெருவில் இழுத்து விட்டுவிடுவார்.'

'அவர் மகனுக்கோ, நான் அவன் காதலில் குறுக்கிட்டு விட்டேன் என்று கோபம்; அப்பாவைவிட அதிகமாகவே பாய்வான். அவமானத்தோடு, சோற்றுக்கும் திண்டாட வேண்டியது தான். உங்களுக்கு என் மீது சற்றாவது இரக்கம் இருக்குமானால், நீங்கள் செய்து கொடுத்த வாக்கு, சத்தியம் எல்லாம், ஏமாறக்கூடிய பெண் பிள்ளைதானே என்று அலட்சியமாக இல்லாமல், உண்மையாகவே செய்யப்பட்டவையாக இருக்குமானால், என் ஒன்றுவிட்ட சகோதரனின் பையனைத் தத்து எடுங்கள். உங்கள் தம்பி உங்களைவிட செல்வந்தர். தன் பிள்ளைகளுக்கு வைத்துவிட்டுப்போக அவரிடம் மிகுந்த சொத்து இருக்கிறது. உங்கள் சொத்தையும் விரும்புவது பேராசையினால் தான்' என்றாள்.



திவான் பொறுமை இழந்தவராகச் சொன்னார், 'அசட்டுத் தனமாகப் பேசாதே கமலா. என் மரணத்தைப் பற்றியும் பிணத்தைப்பற்றியும் நீ அவ்வளவு சாதாரணமாகப் பேசுவதைக் கேட்க எனக்கு என்னமோ போல் பயமாக இருக்கிறது. வறுமையும் பட்டினியும் உன்னை – எதிர்நோக்கும் என்பதெல்லாம் சும்மா பேச்சு என்பது உனக்கே தெரியும். உன்னுடைய பணம் என்னிடம் இரண்டாயிரம் ரூபாய் இருக்கிறது. அதைச் சேர்ந்த வட்டியும் இருக்கிறது. அதை இரண்டு மடங்கு ஆக்குகிறேன். வேண்டுமானால் மும்மடங்கும் ஆக்குகிறேன். என் சுக வாழ்வுக்காக நான் உனக்கு மிகவும் கடன்பட்டிருக்கிறேன். நான் ஒன்றும் நன்றி மறப்பவனல்ல. நீ உன் உறவினர் ஒருவரிடம் ரகசியமாக ஏழாயிரம் ரூபாய் கொடுத்து வைத்திருப்பது எனக்குத் தெரியாது என்று நினைத்துக்கொண்டிருக்கிறாய் பயப்படாதே. பொய் சொல்லப் புறப்பட்டு விடாதே. நான் அதற்காக உன்னைக் குற்றம் சொல்லவில்லை. அந்தப் பணத்தை நான் தொடவும் மாட்டேன். ரொம்பப் பயந்து விட்டாயே. நான் இனிமேல் அதைப்பற்றிப் பேசமாட்டேன். இவ்வளவு தொகையையும் சேர்த்தால், அப்படியே எனக்கு ஏதாவது நேர்ந்து, என் தம்பி

உன்னைத் துரத்திவிட்டுவிட்டாலும் உன் ஒற்றைக் கட்டைக்கு அது தாராளமாகப் போதும். சுவிகாரத்தைப்பற்றி நான் இன்னும் எதுவும் தீர்மானம் செய்யவில்லை. புலமை வாய்ந்த சீமாட்டியம்மா எழுதியிருக்கும் தான்தோன்றிக் கடிதத்தால் அதைச் சற்றுத் தள்ளிப்போட வேண்டியதிருக்கிறது. அவள் சம்மதம் இல்லாமல் தப்புக் கணக்குப் போட்டுவிட்டேன். கமலா, நீயே யோசித்துப் பார். என் ஆஸ்தியில் பெரும் பாகம் பிதிரார்ஜிதமானது. அதை என் தம்பி பிள்ளைகளுக்கல்லாமல் பிறருக்கு வைத்துச் சென்றால் உலகம் என்னைப்பற்றி என்ன சொல்லும்?' 'உனக்கே நியாயமாகப்படுகிறதா, சொல். நீ நல்ல பெண்ணல்லவா. என் அதிகப்பிரசங்கி மனைவியை வழிக்கு கொண்டுவருவதற்கு நீ அல்லவா எனக்கு உதவி செய்ய வேண்டியவள் அல்லது அவள் சீதனச் சொத்து சேராமல் போய்விடுமே?' என்றார்.

'மானத்தைவிட சிறந்த பொருள் ஒரு பெண்ணுக்கு வேறு எதுவும் இல்லை. நீங்கள் உங்கள் இன்பத்துக்காக அதை விட்டுக் கொடுக்கும்படியாக என்னிடம் கேட்டபோது உலகம் என்னைப்பற்றி என்ன சொல்லும் என்பதை நான் சிறிதாவது சிந்தித்தேனா? கிளாவிருந்தாவுக்கு இவ்வளவு அறிவு இருக்கும் என்று நான் நினைத்ததில்லை. யோசனையுடன் முடிவு செய்திருக்கிறாள். நான் ஒன்றும் உங்களுக்கு உதவி செய்யப்போவதில்லை. மாறாக அவள் செய்திருக்கும் முடிவில் அவள் உறுதியுடன் நிற்பதில் அவளுக்குத் துணை செய்வேன். நாங்கள் எதிராளிகள் அல்ல. ஒரே நோக்கம் கொண்ட நண்பர்கள்' என்று வெடுக்காகச் சொல்லிவிட்டு அறையைவிட்டு வெளியே நடந்தாள்.

### *நெருப்புடன் விளையாட்டு*

மாதவராவின் காதலை கிளாவிருந்தா அறிந்தபோது முதலில் பயந்தாள். காதலைப்பற்றி நூல்களில் படித்திருக்கிறாளே தவிர அனுபவத்தில் உணர்ந்ததில்லை. கணவன் மீதிருந்த அருவருப்புணர்ச்சியால் இனக் கவர்ச்சி என்பதே அவளுக்கு வெறுப்பாக இருந்தது. இல்லறம் அவளைத் தாழ்வுபடுத்துவதாகவே அவளுக்குத் தோன்றிக்கொண்டிருந்தது. ஆனால் மாதவராவின் சஞ்சலப் பார்வை அவள் இதுவரை அனுபவித்திராத ஒரு கிளர்ச்சியை அவள் நெஞ்சில் தோற்றுவித்தது. அது இன்னதென்று அவளுக்கே தெளிவாகப் புரியவில்லை.

கமலாபாய் காதல் தத்துவ விளக்கம் செய்ததையும் கேட்டுவந்தாள். பொருத்தமில்லாத திருமணத்தைப்பற்றி அவள் செய்த கண்டனங்களும் அவள் காதில் விழுந்து வந்தன. காதலின் சக்தியைப்பற்றி அவள் அடிக்கடி கேட்டு வந்த பேச்சுகள், அந்த இளைஞனைத் தவிர்க்க அவளாக எடுத்துக் கொண்ட முயற்சிகள், நிறைவேறாத காதல் கொப்பளிக்கும் கண்களோடு அவன் அவளைப் பார்க்கும் ஏக்கங்கொண்ட சஞ்சலப் பார்வை இவையெல்லாம் அவளையும் அறியாமல் அவள் மனதில் வேலை செய்து வந்தன. அந்த இளைஞனின் தவிப்பைக் கண்டு அவன் மீது இரக்கம் கொண்டாள். ஆனால் இவை எல்லாவற்றுக்கும் மேலாக, பய உணர்ச்சியும் மேலோங்கி நின்றது.

தன் பாட்டனார் முதலில் தன்னை மாதவராவுக்குக் கொடுக்கவேண்டும் என்று எண்ணியிருந்ததாக கமலாபாய் சொல்லக் கேட்டிருந்தாள். அப்படி நடந்திருந்தால் என்று அவளால் எண்ணிப் பார்க்காமல் இருக்கமுடியவில்லை. தற்போதைய வாழ்வையும் அந்தக் கற்பனை வாழ்வோடு ஒப்பிட்டாள்.

மாதவராவின் நடவடிக்கைகளைப்பற்றி அவள் முதலில் கணவனிடம் சொல்லாமல் விட்டது கமலாபாயின் ஆலோசனையின் பேரில் தான். ஆனால் வரவர அவளாகவே அதைச் சொல்ல விரும்பவில்லை. அவனைக் காட்டிக்கொடுப்பது கொடுமையாகப்பட்டது. தன்னைக் காத்துக்கொள்ளும் திடன் இருந்ததால் அது அநாவசியமாகவும் தோன்றியது அல்லது மனதின் அடித்தளத்தில் இருந்த குற்ற உணர்ச்சியால் தான் அவள் அவ்வாறு சொல்லாமல் இருந்திருக்கலாம். மாதவனை மணந்திருந்தால், என்று மனதின் ஆழத்தில் உண்டாகும் தவிர்க்க முடியாத அந்த நினைவு அவளைக் கறைப்படுத்தியிருந்தது. அகத்தில் களங்கம் இருந்திருந்ததால் அவரிடம் பேச முகம் இல்லாமல் இருந்தது.

கமலாபாயின் சூழ்ச்சிகளைப்பற்றி அவளுக்கு ஒன்றும் தெரியாது. அவள் கணவரும் தனக்குத் தெரிந்ததாகக் காட்டிக்கொள்ளவில்லையாதலால் அவள் எதுவும் சந்தேகிக்க வில்லை. ஆதலால் மாதவராவ் தஞ்சையை விட்டுப் போகிறான் என்று அவள் கேள்விப்பட்டதும் ஓரளவு நிம்மதி அடைந்தாள். ஆனால் ஏமாற்றமும் கூடவே இருந்தது.

நன்றும் தீதும் பிரிக்க முடியாதபடி மனித உள்ளங்களில் பின்னிப் பிணைந்து போய்விடுகின்றன. உணர்ச்சிகள் எப்படி இருந்தபோதிலும், பதிவிரதா தர்மத்தை மீறவேண்டும் என்று கனவிலும் நினைத்தவளல்ல. மாதவனுக்காகவேனும் அவன் தஞ்சையைவிட்டுச் செல்வது நல்லது என்றுதான் எண்ணினாள். அண்மையில் அவனுக்கு ஒரு பணக்காரப் பெண்ணுடன் திருமணம் ஆகியிருந்தது. அவன் அயலூரில் இருக்கும்போது தன் காதலை மறந்துவிடுவான்; ஓரிரண்டு ஆண்டுகள் கழித்து அவன் திரும்பிவருவதற்குள் மனைவி அவனுடன் வாழ வந்து விடுவாள்; எல்லாம் சரியாகி விடும் என்று எண்ணினாள். தகுதியான எண்ணம்தான். ஆனால் இதனூடே இதற்கு மாறான இன்னொரு நினைவோட்டமும் இழையோடிற்று. அவனால் கிளறிவிடப்பட்ட காதல் உணர்வுகள் இப்படி ஒரு முடிவுக்கு வந்துவிடவேண்டுமா என்பது தான் அது. அழகைவிட செல்வமே அதிகமாக வாய்ந்த மனைவியை, அவன் தன்னைக் காதலித்த வேகத்துடன் விரும்பமுடியுமா என்ற சந்தேகம் அவளுக்கு இதமாக இருந்து வந்தது. இந்தச் சோதிடம் ஒன்று குறுக்கே வந்திருக்காவிட்டால் எது நடந்திருக்கும் என்பதை நினைத்தபோது தன் மீதும், அவன் மீதும் அவளுக்கு இரக்கம் பொங்கிற்று.

மாதவன் தஞ்சையைவிட்டுச் செல்கிறான் என்பதைக் கேள்வியுற்றதும் அவள் எண்ணங்கள் சிந்தனைகள் இவ்வாறு தான் இருந்தன. அவள் உள்ளத் தூய்மைக்கும் மன அமைதிக்கும் ஆபத்தானவையாகவே அவை இருந்தன. ஆனால் அவை தவிர்க்க முடியாதவை, தவிர்க்க விரும்பாதவை.

கங்காபாய் திடீரென்று நோயாகப் படுத்தபோது, வீட்டு வேலைகளினிடையே தன் காதலைச் சிறிது மறந்திருந்தாள். அதற்குள் கோடையிடி போன்று அந்தத் திடீர் சம்பவம் நிகழ்ந்துவிட்டது. கமலாபாய் சொன்னதுபோல எமன் வீட்டு வாசலில் வந்து காத்துக்கொண்டிருக்கும்போதே, நோயாளியின் அறையை அடுத்த நடையில் சில வினாடிகளுக்குள் அந்த நிகழ்ச்சி நடந்தது. அன்று இரவு மாதவன் புறப்படுகிறான் என்பதை கிளாவிருந்தா கேள்விப்பட்டிருக்கவில்லை. அவள் அவனை ஏறக்குறைய

மறந்தே விட்டிருந்தாள். அவன் அவளிடம் பேசியபோது தன் எண்ணங்களைக் கோர்வைப்படுத்திக் கொள்ள அவளுக்கு நேரம் இல்லாதிருந்தது. அவனுக்கு என்ன பதில் சொன்னோம் என்றுகூட இப்பொழுது அவளுக்குச் சரியாக நினைவு இல்லை. ஆனால் மறக்க இயலவில்லை.

ஆனால் இப்பொழுது அவள் வேறுவிதமாக நினைத்தாள். மீண்டும் மீண்டும் அந்தக் காட்சியை அவள் தன் நினைவில் எண்ணிப் பார்த்தாள். மாதவனின் தாபத்தையும் மனித சக்திக்கு அப்பாற்பட்ட ஆசையையும் இப்பொழுது தான் சரிவர அவளால் உணர முடிந்தது.

அவனை மணந்திருந்தால் என்று அந்த நடக்காத ஒன்றைக் கற்பனை பண்ணுவாள். அந்தக் கற்பனையில் உணர்ச்சியின் உந்துதல் மாத்திரமே இருப்பதாகத் தோன்றும் எண்ணமோ, உடலோ இருப்பதாகத் தோன்றாது. மாதவன் அடுத்த வீட்டில் வசித்துக் கொண்டிருந்தவரை, அவளுக்குப் பய உணர்ச்சியே மேலோங்கி நின்றது. அதனால் காதலைவிட அவன் மீது இரக்கமே அதிகமாக இருந்தது. அவன் போய்விட்ட பிறகோ அந்த இரக்கம் மிக ஆபத்தான தொன்றாகப் பரிணமிக்கத் தொடங்கிற்று. இது ஒழுக்கக் குறைவானது என்று அவளுக்குத் தெரியாமல் இல்லை.

அத்துமீறிய அவள் எண்ணங்களையும் கற்பனைகளையும் அவள் நசுக்க முயலாமலும் இல்லை. ஆனால் கணவனின் கொடுமையினால் அவள் அடிக்கடி தனியாகவும் மனம் நொந்தும் இருக்க நேரிட்டது. அந்த வேளைகளில் அவள் மனதுக்குள்ளிருந்த சட்டாம்பிள்ளை தூங்கிவிடுவான். காதல் கற்பனைகள் தலைதூக்கும். நாராயணனைத் தத்து எடுத்தால் மீண்டும் இரண்டு குடும்பங்களும் ஒன்று சேரும் என்பதை உணர்ந்தாள். அப்பொழுது மாதவன் திரும்பி வருவான். அதன் விளைவுகளை எதிர் நோக்கவே அஞ்சினாள். அப்பொழுது அவள் ஆன்மாவில் பெரும் போராட்டம் நிகழும். அதில் அவள் அவமான கரமாகத் தோற்றுப்போக நேரிடும் என்று எதிர்பார்த்தாள். அல்ல அப்படித் தோற்பதையே அவள் விரும்பினாள் என்றே சொல்ல வேண்டும். இதனால் தான் அவள் சுவிகாரம் எடுப்பதை ஆட்சேபித்தாள்.

தன் ஸ்தீரிதனச் சொத்தையும் சுவிகாரப்பிள்ளை அடைய வேண்டும் என்று தன் கணவர் திட்டம் வகுக்கும்போது தன்னை ஒரு வார்த்தை கேட்கவில்லையே என்று ரோசமும் அவளுக்குச் சிறிது இருந்தது. அவர் அனுப்பி மற்றவர்கள் அவளிடம் அதைப்பற்றி பேசினார்கள். அவர் பேசவே இல்லை. இன்னொரு விஷயத்தையும் கமலாபாய் அவளுக்குச் சுட்டிக் காட்டியிருந்தாள். தன் சொத்துகளுக்கெல்லாம் நாராயணனை உரிமையாக்க சம்மதம் தந்துவிட்ட பின்னர் தன் கணவனும் அமாத்யாவும் தன் பாட்டனாரின் விருப்பத்தை நிறைவேற்றி வைப்பதில் அவளுக்கு உதவி செய்ய மாட்டார்கள். மாறாக அடுத்த கிராமத்தையும் தங்களுக்கே எடுத்துக்கொள்ள முயற்சி செய்வார்கள். இதுவும் அவளுக்கு அச்சத்தை விளைவித்தது. அவளுக்குத் தெரிந்தவரை சந்நியாசி எதுவும் எழுதி வைத்துவிட்டுச் செல்லவில்லை. சாரதாவை அனுப்பி சிலரை விசாரித்துப் பார்த்தாள். உப்பூர் வருமானத்தை தர்ம காரியங்களுக்குச் செலவிட வேண்டும் என்றும், மலையூரை அவளுக்கு ஸ்தீரிதனமாகக் கொடுக்க வேண்டுமென்றும் சந்நியாசி மகாராஜாவிடம் கேட்டுக் கொண்டிருந்தார். என்று மாத்திரம் தெரிந்தது. அவள் கணவரும் அவர் தம்பியும் அப்படித்தான் சொல்லிவந்தார்கள். ஆனால் சமயம் கிடைத்தால் மனம் மாறி இரண்டு கிராமங்களையும் அவள் மூலமாய்த் தங்களுக்குச் சொந்தமாக்கிக் கொள்ளத் தயங்கமாட்டார்கள் என்று அவள் பயந்தாள்.

மகாராஜா இருக்கிற நிலையில் அவருக்கு இப்பொழுது உப்பூரைக் கொடுத்துவிட மனமில்லை என்று சொல்லப்பட்டது. அவர் அப்படிக் கொடுக்காது போனால், தன் கணவரின் அனுபோகத்தில் இருந்து வரும் மலையூரின் வருமானத்தைக் கொண்டாவது அறப்பணிகளை முடித்துவிட வேண்டும் என்று அவள் விரும்பினாள். இப்படியாக ஒன்றுக்கு மேற்பட்ட காரணத்தினால் சுவிகாரத்துக்கு உடன்படாமல் இருந்து வந்தாள். சில மாதங்கள் கடந்தன. பூணூல் இல்லாமலே நாராயணன் வளர்ந்து கொண்டிருந்தான். அவன் தாய் கிளாவிருந்தாவின் சம்மதத்துக்காக அவளை நச்சரிக்கத் தொடங்கினாள்.

### *சதிகாரச் சகோதரர்கள்*

'யுத்தம் இப்பொழுது நிச்சயமாக வராது. மகாராஜா கவலைப்படவே தேவையில்லை என்று நீ அவரிடம் உறுதியாகச் சொல்லலாம். நாம் விரும்பினால்கூட இப்பொழுது சண்டை வராது.'

இவ்வாறு திவான் ஒரு பிற்பகல் தம் தம்பியிடம் சொல்லிக் கொண்டிருந்தார். மேலூர் அணைக்கட்டு நவாபின் பிராந்தியத்திலிருந்தது. அதை நவாபும் மராமத்துச் செய்யவில்லை. தஞ்சை அரசையும் செய்யவிடவில்லை. ஆகவே தஞ்சை முகத்துவாரப் பகுதியின் செழிப்பான விளைச்சல் பாதிக்கப்பட்டுப் பஞ்சம் வரும்போலிருந்தது. மத்தியஸ்தப் பேச்சு தோல்வியில் முடிந்தது. சண்டை வந்துவிடுமோ என்று அஞ்சினர். சண்டையில் ஈடுபடும் நிலையில் அப்பொழுது தஞ்சை இல்லை. அது விஷயமாக திவானின் சோதிடத்தை அறிய பிரதாபசிங் விரும்பினார். திவான் நோய்ப்படுக்கையாக இருந்ததால் அவர் தம்பி அமாத்யாவை அனுப்பிக் கேட்டு வரச் சொல்லியிருந்தார்.

'ஒரு பரஸ்பர நண்பரின் தலையீட்டால் விஷயம் சமாதானமாக முடியும். பரஸ்பர நண்பர் அநேகமாக ஆங்கிலேயராக இருக்கலாம். முன்னால் நம்மைக் காப்பாற்றிய ஆங்கிலேயர் இப்பொழுது இங்கு இருப்பது நல்லதாயிற்று. பிரெஞ்சுக்காரன் முற்றுகையிலிருந்து அவர்தான் நம்மை விடுவித்தார். கப்பம் விஷயமாக நவாப் நம்மோடு போருக்கு எழுந்தபோதும் இவர் தான் பேச்சு வார்த்தை நடத்தி நல்லபடியாய் முடித்து வைத்தார். இப்பொழுதும் அவரையே நவாபிடம் அனுப்பும்படி மகாராஜாவிடம் சொல்லு' என்றார் திவான். 'படையில் நிரந்தரமாக இருந்துவரும் வீரர்களுக்குக்கூட இரண்டு மாதமாகச் சம்பளம் கொடுக்கவில்லை. கஜானா ஏறக்குறைய காலி. நாம் இப்பொழுது எப்படி போரிட முடியும்?' என்றார் அமாத்யா.

'அந்தப் பயம் வேண்டாம். கிரகங்கள் நிச்சயமாகச் சொல்லுகின்றன. நான் சொன்னதாக மகாராஜாவிடம் சொல்லு. உப்பூரைப்பற்றி அண்மையில் மகாராஜாவிடம் ஏதாவது பேசினாயா?' என்று கேட்டார் திவான்.

'இன்று காலையில் கூட மெதுவாகப் பேச்சு எடுத்துப் பார்த்தேன். மகாராஜாவுக்கு அது மனச்சான்றை உறுத்திக் கொண்டிருப்பதாகவும், குருவின் கட்டளையை நிறைவேற்றாததால் மனம் வாதிப்பதாகவும் மாத்திரமே சொன்னார். இந்த மகாராஜாவின் ஆயுசு காலத்தில் நாம் அந்தப் பேச்சை எடுக்காமலிருப்பதே

உசிதம் என்று எனக்குத் தோன்றுகிறது. ஏனென்றால் வெண்ணாறு சத்திரத்துக்குக் காலமான பண்டிதராவின் பெயரை இடுவதைப்பற்றி இன்று காலையில் பேசினார். அப்படியானால் உப்பூரை மனச்சான்றுக்கு விரோதமில்லாமல் தாமே வைத்துக்கொண்டுவிடுவார். இன்னொரு விஷயம்: மகாராஜாவின் வியாதி வேகமாக முற்றிவருவதாகவும், அவருக்கு இன்னும் பல ஆண்டுகள் இல்லை என்றும் அரண்மனை வைத்தியர் சொன்னார். ஆகையால் நாம் பொறுத்திருந்து அவர் காலத்துக்குப்பின் அவர் மகன் துளசிஜியிடமிருந்து கிராமத்தை வாங்கிக்கொள்ளலாம்' என்றார் அமாத்யா.

பல ஆண்டுகள் என்ன, பல வாரங்கள்கூடப் பிழைத்திருக்க மாட்டார்- நமக்குள் இருக்கட்டும். யுத்தம் காரணமாக இவர் ஜாதகத்தையும் இன்று காலையில் பார்வையிட்டேன். இன்னும் இருபத்தைந்து நாளில் அவருக்கு ஒரு பெரிய கண்டம் இருக்கிறது. முக்காலே மூணுவீசம் பிழைக்க மாட்டார். தம்பி, என்னுடைய நாளும் நெருங்கிவிட்டது. அடுத்த மாதம் 28 ம் தேதிதான் கெடு. இரண்டு பாப கிரகங்கள் என் உயிரை வாங்க சதி செய்கின்றன. இன்று காலையில் கூட என் ஜாதகத்தைப் பார்த்தேன். உப்பூரை என்னுடையது என்று ஒரு நாளாவது சொல்லவேண்டும். அப்பொழுது தான் என் நெஞ்சு வேகும்!' என்றார் திவான்.

அமாத்யா கலவரமடைந்தவராக 'நீங்கள் சுவிகாரத்தைப் பற்றி ஒன்றும் முடிவு செய்யவில்லையே? உங்கள் காரணமாக அவசரம் இல்லாவிட்டாலும், நாராயணன் உபநயனத்தை இன்னும் தள்ளிப்போட முடியாதே?' என்றார். 'என் ஜாதகத்தை இன்று காலை பார்த்ததிலிருந்து நானும் அதைப்பற்றி யோசித்துக் கொண்டிருக்கிறேன். அடுத்த மாதம் 28ம் தேதியைத் தாண்டிவிட்டேனானால் அப்புறம் ஏழு வருடம் வரை உயிர் வாழ்ந்திருப்பேன். ஆனால் இந்தக் கண்டம் பிழைத்தால் அது பெரிய அற்புதம். கிரகங்கள் பலமாக இருக்கின்றன' என்றார்.

இரும்பு இளகிச் சூடாக இருக்கும்போதே அடித்துவிட வேண்டும் என்ற கருத்துடன், அமாத்யா, 'அப்படியானால் நீங்கள் சற்று சுகமானவுடன் சுவிகாரத்தையும் உபநயனத்தையும் வைத்துக்கொள்வோமா' என்று கேட்டார்.

'ஆமாம், நானும் அப்படித்தான் நினைத்தேன். அடுத்த மாதம் ஐந்தாம் நாள் நல்ல நாளாக இருக்கிறது. ஆனால் அந்த மூதேவி மிகவும் பிடிவாதமாக இருக்கிறாள். அவள் சம்மதம் தரமாட்டாளாம். நேற்று மாலைகூட அப்படித்தான் சொன்னாளாம்' என்றார் திவான்.

'அண்ணா, நானும் மண்டையைக் குடைந்து குடைந்து யோசித்ததில் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறேன். நமக்கு அவள் சம்மதமே தேவையில்லை. அவள் உங்களுக்கு எழுதிய கடிதத்தை என்னிடம் காட்டினீர்களே, அதில் அவள் என்ன எழுதி இருக்கிறாள் தெரியுமா? "என் சொத்தைப்பற்றிக் கவலைப்படவில்லை. தங்கள் விருப்பப்படி அதைப் பயன்படுத்திக் கொள்ளலாம்" என்று தெளிவாகச் சொல்லி இருக்கிறாள்.'

'அப்படியா எழுதி இருக்கிறாள்? எனக்கு வார்த்தைகள் தெளிவாக நினைவில் இல்லை. தர்ம காரியங்களைப்பற்றி ஏதோ எழுதி இருந்தாளே?' என்றார் திவான். 'அதுவும் எழுதி இருக்கிறாள். ஆனால் சொத்தைப்பற்றி இதே வார்த்தைகளைத்தான் எழுதியிருக்கிறாள். நீங்கள் இப்பொழுது நாராயணனை ஏகவாரிசாக தத்து எடுத்துக் கொண்டால் நாம் விஷயத்தை எளிதில் முடித்துவிடலாம்' என்றார் அமாத்யா.

கிளாவிருந்தா எழுதியதாக அமாத்யா எடுத்துக் காண்பித்த வாக்கியம் மூலக் கடிதத்தின் சொற்களிலிருந்து சற்று மாறுபட்டது; பொருளில் முற்றிலும் மாறுபட்டதாகும். கடிதம் அவர் கைவசம் இருந்து வந்தது. ஒருநாள் திடீரென ஏற்பட்ட ஞானோதயத்தில் கடிதத்தில் சில சிறு திருத்தங்கள் செய்து வைத்தார். இப்பொழுது அவர் இரும்புப் பெட்டியில் இருந்த கடிதத்தின் சொல்லும் பொருளும் அவர் சொன்னவாறுதான் இருந்தது!

'அவள் அப்படி எழுதியிருக்கிறாள் என்றால் நாம் காரியத்தை நடத்திவிடலாம். நான் இவ்வாறு நினைக்கவே இல்லை. சரி, அப்படியானால் பயமில்லை. மேலும் அவள் சொத்தில் உரிமை கேட்க நாராயணனுக்குப் போட்டியாக யார் இருக்கிறார்கள்? என் காலத்துக்குப் பிறகு தினமும் சாப்பாடும், வருடத்தில் நாலைந்து துணிகளும்தானே அவளுக்குத் தேவைப்படும்? சரி. சுவீகாரத்தையும், பூணூல் கலியாணத்தையும் அடுத்த மாதம் 5 ம் தேதி வைத்துக்கொள்வோம். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச்செய். இன்னும் கடத்திக்கொண்டு போகமுடியாது. இன்று இரவே மகாராஜாவுக்கும் அதைத் தெரியப்படுத்திவிடு. என் மனைவி சம்மதம் தரவில்லை என்பதாக எதுவும் சொல்லவேண்டாம்' என்றார் திவான்.

'நான் என்ன அத்தனை முட்டாளா, அண்ணா? அவள் முழுச் சம்மதத்துடன் இந்தக் காரியம் நடப்பதாக அவருக்குப் படும் படியாகத்தான் சொல்லுவேன். சில நாட்களுக்குமுன் அவர் என்னிடம் அதைப்பற்றிக் கேட்டார். நீங்கள் ஒன்றும் முடிவு செய்யவில்லை என்பதாகச் சொன்னேன். நீங்கள் உங்கள் ஜாதகத்தைத் திரும்பப் பரிசீலித்ததில் அடுத்த மாதத் தொடக்கத்தில் சுவீகாரம் செய்துகொள்ளத் தீர்மானித்து விட்டதாக இப்பொழுது சொல்லுவேன்.'

ஆமாம், அவ்வளவு சொன்னால் போதும்' என்று சொன்னவர் திடீரென்று 'ஆனால் சற்று இரு. நான் பரிசீலித்த ஜாதகம் உண்மையானதுதானா என்று கவனிக்கவேண்டும். கிளாவிருந்தாவை மணம் செய்துகொள்ள சந்நியாசியின் சம்மதத்தைப் பெறுவதற்காக அவள் ஜாதகத்துக்குப் பொருத்தமாக போலி ஜாதகம் தயாரித்திருந்தேனே, அதைத்தான் பார்த்துவிட்டேனோ?' என்று கட்டிலின் அருகில் முக்காலி மீதிருந்த ஓலைச் சுவடிகளைத் தேடிப் பார்த்து, ஒன்றை எடுத்துக் கவனமாகப் பார்த்தார்.

'ஆமாம், சரியான ஜாதகம்தான். என் நாள் நெருங்கி விட்டது. மகாராஜாவின் முடிவும் மிக நிச்சயம். ஆனால் அவரிடம் ஒன்றும் சொல்லாதே. அவர் இதற்காக நமக்கு நன்றி சொல்ல மாட்டார்' என்றார்.

நிச்சயமாக மாட்டார்' என்றார் அமாத்யா. 'ஆனால் நீங்கள் இந்தக் கண்டம் தப்பி வெகு நாள் வாழ்வீர்கள்' என்று சகோதர பக்தியுடன் சொல்லிவிட்டு எழுந்தார், அமாத்யா.

அறைக் கதவைத் திறந்ததும் கிளாவிருந்தா அங்கிருந்து வீட்டினுள் செல்வதைக் கவனித்தார். அவள் சாவித் துவாரத்தின் வழியாகத் தாங்கள் பேசியதைக் கேட்டுக் கொண்டிருந்திருக்கவேண்டும் என்று அனுமானம் செய்தார்.

**தொடரும் ..**

# விடுமுறை வேதாகம பள்ளி

இன்று இந்தியா முழுவதும் லட்சக்கணக்கான இளம் சிறார்களை ஆண்டவர் அண்டை வழிநடத்தும் அற்புதமான அமைப்பாக திகழும் விடுமுறை வேதாகமப் பள்ளி இந்திய மண்ணில் முதன் முதல் உதயமானது கோவில்பட்டியில் 1952ஆம் ஆண்டில் ஈடித் என்ற அமெரிக்க பெண்மணியைக் கொண்டு சிறுவயதிலேயே தாயை இழந்து சத்தியத்தை சுத்தமாகும் சத்தமாகவும் சொல்லிக்கொண்டே இருக்க வேண்டும் என்ற ஆசை வேட்கை கொண்ட மாணவர் சாமுவேல் என்னும் மாணவர் மூலமாக கோவில்பட்டி பகுதியில் முதல் இந்திய VBS ஆரம்பிக்கப்பட்டது. என்று சொன்னால் அதில் எள்ளளவும் சந்தேகம் இல்லை.

தென்னிந்திய வேதாகம நிறுவனத்தின் மாணவராக இருந்த சாமுவேல் சிறுவர்கள் ஊழியத்தில் மிகவும் ஆர்வமாக இருந்தவர். இவரது பங்காரபேட்டை வேதபள்ளி ஆசிரியர்களான திருமதி ஹேமில்ட்டன், மிஸ் ஈடித் பெர்ல் மார்கன் இதன் அச்சாரம்.

அமெரிக்க தேசத்திலிருந்து இந்திய வேதாகமச் சங்கம் தற்போதைய (South Indian Bible seminary) தங்கி ஊழியம் செய்ய மூன்று தோழிகளோடு இந்தியா வந்த ஈடித் பெர்ல் மார்கன் அம்மையார் இந்தியா வந்த முதல் மூன்று ஆண்டுகளில் பல்வேறு கஷ்டங்களில் வியாதிபிடியிலும் பயங்கரமான போராட்டங்களின் மத்தியிலும் புறமுதுகு காட்டி ஓட மாட்டேன் என்று மொழி தெரியாத இடத்திலும் கிறிஸ்துவுக்காக நிமிர்ந்து நிற்க பெலன் பெற்று கிறிஸ்துவுக்காக பல்வேறு போராட்டங்களின் மத்தியிலும் மீண்டும் தாயகம் சென்று உடல் நலம் பெற்று மீண்டுமாக இந்தியாவிற்கு வருகிறார்.

உலக நற்செய்தி தூதுக்குழு தூதுவராக இருந்த ஈடித், பங்காரபேட்டையில் மாணவர்களின் பெயர் பட்டியல்களில் வித்தியாசமாக காணப்பட்ட சாமுவேல் என்ற அந்த மாணவரை இனம்கண்டு ஈடித்தும், ஹேமில்ட்டன் தம்பதிகளும் சாமுவேல் மீது கொண்ட நாட்டத்தால் அவருடைய பூர்வீக சரித்திரத்தையும், குடும்பத்தையும் பற்றி கேட்டு தெரிந்து கொண்டார்கள். விசுவாச வீரர் சாமுவேல் மீது அவர்களுக்கு ஒரு தனி அக்கறை இருந்தது. ஏற்கனவே சிறுவர் ஊழியத்தில் ஆர்வமாக இருந்த சாமுவேலுக்கு ஈடித் தன் தேசத்திலுள்ள விடுமுறை வேதாகம பள்ளி (VBS) ஊழியங்களை பற்றியும் சிறுவர்களுக்கு வேதத்தைக் கற்றுக் கொடுப்பதற்கு எப்படி எல்லாம் முயற்சி செய்வார்கள் ஒவ்வொரு ஆண்டும் ஒவ்வொரு கருப்பொருளைக் கொண்டு எப்படி எல்லாம் கற்றுக்கொடுப்பார்கள் என்றும் வேத கதாபாத்திரங்களையும் கொண்டும் வரலாற்று நிகழ்ச்சிகளையும் சம்பவங்களையும் 10 நாட்களுக்கு நடத்தப்படும் விடுமுறை வேதாகம பள்ளி வரலாற்றுப் பிண்ணனியத்தை சாமுவேலிடம் எடுத்து சொல்லி வந்தார்கள். அந்த சிறுவர்களுக்கான வரலாறு சாமுவேலின் மனதை கொள்ளை கொண்டது. ஏன் இந்த விடுமுறை வேதாகம பள்ளியை (VBS) எங்கள் சிறுவர்களுக்கும் இதை அறிமுகம் செய்யுங்கள் என்று அவருடைய ஆசிரியர்களான ஹேமில்ட்டன் மற்றும் ஈடித்தையும் விடாமல் நச்சரித்துக் கொண்டே இருந்தார்.

அதன்பின்பு வேதாகம நிறுவனத்தின் ஒருசில அதிகாரிகளோடு கலந்தாலோசித்து இந்திய மண்ணில் VBS க்கான ஆயத்தத்திற்கான திட்டங்கள் வகுக்கப்பட்டு அப்போது கோவில்பட்டியில் சேகர குருவாக இருந்த அருள்திரு.துரைசாமி அவர்களிடத்தில் அந்த வருடத்தின் கோடைகாலத்தில் VBS ஆரம்பிக்க உதவி செய்தார்.





அத்திட்டத்தின் படி SIBI மாணவர் சாமுவேலுடன் ஈடித்தை கோவில்பட்டிக்கு அனுப்பியது. அதன்படி மே 1952 ஆம் ஆண்டு துரைசாமி குருவானவர் ஜெபிக்க முதல் இந்திய VBS கோவில்பட்டியில் ஆரம்பமானது.

கர்த்தரின் மகத்துவத்தை கண்கூடாக கண்டு அனுபவித்த இக்குழுவினர் அவர்களுக்குள்ளான பாரம் கொழுந்துவிட்டு எரிய ஆரம்பித்தது நாளுக்கு நாள் அதிகரித்தது அதில் சாமுவேல் பச்சமுத்துவின் இளைய சகோதரி பாக்கியத்தாய் பிச்சமுத்து அவர் சிநேகிதி லீலா வேதமணியும் VBS ஊழியர்கள் தீவிரமாக இறங்க வேண்டும் என்பது. அதற்குள்ளாக ஓர் ஆண்டு ஒடி 1953 ஆம் ஆண்டு கோடை விடுமுறை நெருங்கியது. இந்த ஆண்டு கோவில்பட்டி சபையோடு தூத்துக்குடியில் உள்ள இரண்டு சபைகளையும் சேர்த்து மூன்று இடங்களில் நடத்த வேண்டும் என்று நடத்தி சுமார் 500 சிறுவர்களை சந்தித்தனர்.

ஆத்தும அறுவடையோ அபாரமாக இருந்தது ஆம் 'அற்பமான ஆரம்பத்தில் நாளை யார் அசட்டை பண்ணலாம்.' (சகரியா 4:10)

அதன்பின்புதிருநெல்வேலியில்உள்ளபாளையங்கோட்டை சபை SIBI க்கு VBS க்காக விண்ணப்பித்தது அதன்படி 1954-ஆம் ஆண்டு மே மாதம் திருமதி ஹேமில்ட்டன் மற்றும் ஈடித் பெர்ல் மார்கன், சாமுவேல் குழுவினரால் பாளையங்கோட்டையில் VBS ஆரம்பித்தது.

ஈடித் இந்திய தேசத்திற்கு அனுப்பிய உலக நற்செய்தி தூது இயக்கம் அம்மையாரை தனது தேசத்திற்கு திரும்ப அழைத்தது. ஆனால் அம்மையாருக்கு பாளையங்கோட்டையில் ஒரு தனி ஈர்ப்பு ஏற்பட்டது. 'இந்திய மண்ணின் VBS ஊழியமே உனக்கு நான் காட்டும் வழி. இதில் நடந்தால் உன் கரம் பற்றி நானும் உடன் நடப்பேன்' என்று ஆத்தும நேசரின் பாச வார்த்தைகளை கொண்டு மீண்டுமாக திருநெல்வேலி நோக்கி அப்போதைய நெல்லை பேராயர் மகாகனம் ஜெபராஜ் அவர்கள் மிகப்பெரிய வருகையுடன் அவர்களை வரவேற்று அவர்கள் தங்குவதற்காக அனைத்து ஏற்பாடுகளையும் செய்து கொடுத்தார்கள்.

ஈடித் அம்மையாருடன் ஆசிரியர் பயிற்சி பெற்றவர்களான லீலா வேதமணி அம்மா அவர்கள் முதலாவதாகவும் அவரைத் தொடர்ந்து பாக்கியத்தாய் பிச்சமுத்து அம்மா அவர்களும் முழு நேரமாய் இணைந்தார்கள்.

முதல் இந்திய VBS மங்கைகளான லீலா அக்காவும், பாக்கியத்தாய் அக்காவையும் கொண்டு இவர்கள் மூலமாக மேலும் திருநெல்வேலி பகுதியில் VBS ஊழியம் வளர ஆரம்பித்தது. 1973 ஆம் ஆண்டு முதல் இவர்கள் நெல்லை திருமண்டலத்தில் அருட்சகோதரிகளாக திருநிலைப்படுத்தப்பட்டார்கள்.

இந்த பாளையங்கோட்டை VBS ஊழியமே வட இந்திய திருச்சபைகளின் (CNI) மூலமாக இன்று இந்தியா முழுவதிலும் குஜராத், ராஜஸ்தான் மாநிலங்களில் பல்வேறு மொழிகளில் மிகச் சிறப்பாக வகுப்புகள் நடத்தப்பட்டு வருகின்றன.

இங்கு நாம் பெருமிதத்தோடு நினைவுகூறப்பட வேண்டியவர்கள் ஈடித் மார்கன் அம்மையார் மற்றும் தொடர்பணி செய்துவரும் அருட்சகோதரிகளையும் அனுதினமும் நம்முடைய ஜெபங்களில் கொண்டுவரவேண்டும் இந்த ஊழியங்கள் மூலமாக இன்னும் அநேக கிறிஸ்துவை அறியாத சிறுவர்கள் சந்திக்கப்பட ஊக்கமாக ஜெபிக்க வேண்டும்.

ஆதாரமாக எடுத்துக் கொண்ட புத்தகம் 'கார் ஆச்சி'

**மன்னா செல்வகுமார்**

# ஆய்வுகள் தொடர்பாக ...

**வரலாற்று ஆய்வுகளை இன்னும் அதிகப்படுத்த திட்டங்கள் உண்டு. உங்கள் பகுதியிலுள்ள வரலாற்று செய்திகளை எழுத விருப்பமுள்ளவர்கள் ஒவ்வொரு மாதமும் கொடுக்கப்படும் தலைப்பின் கீழ் எழுதி அனுப்ப அன்பாடு கூட கேட்டுக் கொள்ளுகின்றேன்.**

**உங்கள் கட்டுரைகளை ஒவ்வொரு மாதமும் 25ம் தேதிக்குள் அனுப்புமாறு அன்போடு கேட்டுக்கொள்கிறேன்**

# புரட்சியாளர் ஏமிகார்மைக்கேல்!



இந்திய நாட்டின் வரலாற்றை செதுக்கியதில் கிறித்தவ அயல்நாட்டு மிஷனெரிகளின் பங்கு அளப்பரியது. சமயப்பணிக்கென்று வந்தவர்கள் இங்கிருந்த சமூகச் சிக்கல்களையும் சமுதாயக் கேடுகளையும் கண்டு திகைத்தனர். தாம் வந்த வேலையை ஒதுக்கி வைத்துவிட்டு சமூகத்தைச் சீர்படுத்தும் பணியை முதன்மையாகக் கொண்டு செயல்பட்டிருக்கின்றனர். அதனால் அவர்கள் அடைந்த துயரங்கள் கொஞ்சமல்ல.

இந்தியச் சட்டதிட்டங்கள், சாதி சமய முரண்பாடுகள், கலாச்சார மாறுபாடுகள், நம்பிக்கைகள், மனோபாவங்கள்... போன்ற அனைத்தையும் உள்வாங்கி அவற்றில் மலிந்து கிடந்த அறியாமைகள், ஆதிக்கங்கள், அடிமைத்தனங்கள், போன்ற சமூகத்தீங்குகளை களைய முற்பட்டது அவர்களது சமயப்பற்றையும் தாண்டிய பெருந்தன்மையே என்பதை ஒப்புக் கொண்டாக வேண்டும். ஒவ்வொரு மிஷனெரிகளும் ஒவ்வொரு வகையில் தங்களது பங்களிப்பை இந்தியச் சமூகத்திற்கு அளித்துள்ளனர்.

அவர்களுள் பத்தொன்பதாம் நூற்றாண்டில் இந்தியாவிற்கு வந்த பெண் மிஷனெரி ஏமிகார்மைக்கேல் மிக முக்கிய பங்காற்றியவர். அவர் தம் சமுதாயப்பணியில் சந்தித்த சிக்கல்கள் அதிகம். ஆரம்பமே பிரச்சனையாகத்தான் இருந்தது. ஒவ்வொரு நாளும் போராடித்தான் தனது அரும்பணியை ஆற்றியிருக்கிறார். அவர் சந்தித்த முதல் பிரச்சனையையும் அதில் அவர் வெற்றிக் கொண்டதையும் விளக்குவதே இந்தக் கட்டுரையின் நோக்கம்.

திருநெல்வேலி மாவட்டத்தில் (தற்போது தூத்துக்குடி) பெருங்குளம் என்ற ஊரில் இருந்த ஒரு கோவிலில் தேவதாசியாக விடப்பட்ட 7 வயது இலட்சுமி என்ற சிறுமி அங்கு தனக்கும் தன்னைப் போன்ற சிறுமிகளுக்கும் நடந்த கீழ்த்தரமான பாலியல் கொடுமைகளை வெறுத்து அங்கிருந்து தப்பித்து தனது சொந்த ஊரான தூத்துக்குடிக்கு ஓடிவிட்டாள். இதனை அறிந்த அக்கோவிலில் ஏற்கனவே தேவதாசியராக பணியாற்றும் பெண்கள் தூத்துக்குடிக்கே சென்று தாயை அணைத்தப்படி அழுதுகொண்டிருந்த அப்பெண்ணை வலுக்கட்டாயமாக இழுத்துக் கொண்டு வந்தனர். (Amicarmichel, Things as they are) அதற்கு தண்டனையாக காலில் சூடுவைக்கப்பட்டாள்.

இவ்வாறு அன்றைய நாட்களில் கோவில்களில் விடப்படும் சிறுமிகள் தப்பித்து ஓடுவதும் பின்னர் அவர்களது வீடுகளுக்கே சென்று இழுத்துவந்து தண்டிப்பதும் சர்வசாதாரணமான விசயமாக இருந்துள்ளது.

இதில் பெருங்கொடுமை என்னவெனில் தேவதாசியாக குழந்தைகளைக் கோவில்களில் விட்ட (விற்ற) பிறகு பெற்றோர்களே நினைத்தாலும் திரும்ப அவர்களை மீட்க முடியாது. காரணம் தேவதாசிகளிடமிருந்து தனது மகளுக்காக குறிப்பிட்ட ஒரு தொகையை பரிசாக (தட்சணையாக) பெற்றுவிடுகிறார்கள். எனவே கடனாக பெற்றாலும் திரும்ப செலுத்தலாம், ஆனால் பரிசு அல்லது பரிதானமாக வாங்கியதைத் திரும்ப செலுத்திப் பெற இயலாது. அதுமட்டுமல்ல அவ்வாறு மீண்டும் தனது மகளை மீட்க எண்ணுவது தெய்வத்தையே ஏமாற்றுவது போன்ற தவறான செயல் என்று நம்பவைக்கப்பட்டு அச்சுறுத்தப்பட்டிருந்தனர்.

இந்நிலையில்தான் இலட்சுமி என்ற இச்சிறுமி மீண்டும் அக்கோவிலில் இருந்து எப்படியாவது தப்பித்துவிட எண்ணி அதற்கேற்ற வாய்ப்பை எதிர்நோக்கியிருந்தாள். அப்போது அவள் கேள்விப்பட்ட ஒரு விசயம் அவளது வாழ்க்கை பாதையையே மாற்ற ஏதுவாக இருந்தது.

ஏமிகார்மைகேல் என்ற வெள்ளைக்கார பெண் அப்பகுதி கிராமங்களில் சுற்றித் திரிந்து சமயப்பணி செய்வதாகவும் கைவிடப்பட்ட ஏழை எளிய மக்களுக்கு தம் வீட்டில் அடைக்கலம் கொடுப்பதாகவும் பேசிக் கொண்டது கோவில் வளாகத்திற்குள்ளும் எட்டியது. இந்த வார்த்தையால் சிந்திக்க தொடங்கிய இலட்சுமி தானும் அந்த வெள்ளைக்கார பெண்ணிடம் ஆதரவு கேட்கலாம் என்ற எண்ணத்தை அடைந்தாள். உடனே செயலில் இறங்கி கோவிலை விட்டு வெளியேறி அருகில் இருந்த பண்ணைவிளை என்ற ஊரில் இருந்த ஏமிகார்மைக்கேலை அங்கிருந்த ஒரு பெண்ணின் உதவியோடு சென்றடைந்தாள்.

ஏமிகார்மைக்கேல் அந்தப் பெண்ணை மிகுந்த அன்போடு ஏற்றுக் கொண்டு அவள் தப்பித்ததற்கான காரணங்களை கேட்டு அதிர்ந்தார். அப்பெண்ணை அங்கு நடத்தியவிதம் அருவருக்கத்தக்கதாக இருந்தது (Amicarmichel, Gold cord) என்று ஏமிகார்மைக்கேல் எழுதுகிறார்.

இனிமேல், தான் அங்கு செல்ல போவதில்லை என்று கதறி அழுத அக்குழந்தையை ஏமிகார்மைக்கேல் அரவணைத்துக்

கொண்டார். இந்நிகழ்வு அவரது வாழ்வில் ஒரு திருப்புமுனையாக அமைந்தது. அவரது இலட்சியத்தைத் திசைத்திருப்பி இந்தியாவில் பெரும் சமூகமாற்றத்திற்கான வழியைத் திறந்து வைத்தது.

ஆம்....இந்தியப் பெண்ணின விடுதலைக்காகப் பாடுபட்டவர்களுள் அயர்லாந்து நாட்டுப் பெண்ணான இந்த ஏமிக்கார்மைக்கேல் ( கிபி 1867- 1951) முதன்மையானவர்.

19ம் நூற்றாண்டின் இறுதியில் இந்தியாவிற்குள் கிறிஸ்தவச் சமயப் பணிக்கென்று வந்த இவரை இச்சமூகம் தன்னைச் சுத்திகரிக்கும் பணிகளில் பயன்படுத்திக் கொண்டது. கி.பி. 1895-ம் ஆண்டு இந்தியா வந்து சேர்ந்த இவர் தமிழகத்தில் தனது பணியைச் செய்வதென்ற முடிவில் திருநெல்வேலி மாவட்டத்தில் பண்ணைவிளை என்ற ஊரில் ஏற்கெனவே அங்கு கிறிஸ்தவச் சமயப்பணியினைச் செய்து கொண்டிருந்த மிஷனரி தாமஸ் உவாக்கர் தம்பதியினரோடு இணைந்து தமது சமயப்பணியினைப் இங்குள்ள பெண்களிடையே மேற்கொண்டார்.

சிறுமியான இலட்சுமியின் வருகையை அறிந்த தாமஸ் உவாக்கர் ஒருபக்கம் மகிழ்ச்சியடைந்தாலும் மறுபக்கம் கோவில் ஒன்றிலிருந்து அந்நிர்வாகத்தை மீறி ஓடிவந்த குழந்தையை நாம் வைத்துக் கொள்வது சட்டபடி நியாயமல்ல என்று எடுத்துக்கூறி அக்கோவிலுக்கு தகவல் சொல்லி அனுப்பினார்.

அங்கிருந்து குழந்தையை இழுத்துப் போக வந்த தேவதாசியரான பெண்கள் அப்பெண் அவர்களுடன் செல்ல மறுத்ததால் பெரிய வாதங்களை வைத்து கூச்சலிட்டனர். தங்கள் தரப்பு நியாயங்களை எடுத்துரைத்து தங்களுடன் அனுப்பி வைக்குமாறு வற்புறுத்தினர். அவர்களது கோரிக்கையை ஏமிகார்மைக்கேல் துணிச்சலுடன் மறுத்துவிட்டதோடு.... அந்தப் பெண் உங்களோடு வர விரும்பினால் அழைத்துச் செல்லுங்கள் இல்லையெனில் வலுகட்டாயமாக உங்களோடு என்னால் அனுப்பி வைக்க முடியாது என்றார்.



கோவிலைச் சார்ந்தோரால் பெரும் உருட்டலும் மிரட்டலும் வந்து அச்சுறுத்தியபடி இருந்தது. இறுதியாக தப்பித்து வந்த பெண்ணான இலட்சுமியின் வாக்குமூலத்திற்கு மக்கள் காத்திருந்தனர். தெளிவோடும் உறுதியுடனும் வெளியில் வந்த இலட்சுமி, நான் கோவிலுக்கு வர விரும்பவில்லை. ஏமிகார்மைக்கேல் அம்மாவோடுதான் வாழ விரும்புகிறேன் என்று கூறினாள். அதற்கு பின்னர் எவரும் அங்கு விவாதம் செய்ய விரும்பாமல் பின்வாங்கினர்.

ஏமிகார்மைக்கேலும் அவருடன் இருந்த தாமஸ் உவாக்கர் தம்பதியினரும் ஆங்கிலேயர் என்பதால் சட்டதிட்டங்களில் தங்களைச் சிக்க வைத்துவிடலாம் என்ற அச்சம் தான் இதற்கு காரணம்.

இந்திய அரசாங்கத்தில் அப்போது ஆங்காங்கே பெயரளவில் இத்தேவதாசி முறைக்கு எதிர்ப்புகள் பதிவாகியிருந்தன. 1891 ஆம் ஆண்டில் பன்னிரெண்டு வயதிற்கு கீழுள்ள சிறுமிகளை திருமணம் செய்தல் கூடாது என்ற சட்டம் அமுலுக்கு வந்திருந்தது. இது கோவில் பெண்களான தேவதாசியருக்கும் பொருந்தும். அத்தோடு 1892 ஆம் ஆண்டு சேலம் சி.விஜயராகவாச்சாரியர் தேவதாசிக் கொள்கையை அறவே அகற்ற வேண்டும் என்று தீவிரத்துடன் 'மான்டேக் சுப்ரீம் கவுன்சிலில்' பேசியிருந்தார். (தியாகராஜ் ஆனந்தா,தாமரை மொட்டுகளின் நிதி, ப-129) ஆனால் செயலளவில் எந்த எதிர்ப்பும் இல்லாதிருந்தது. மறைமுகமாக சமயக் கலாச்சாரம், மரபு என்ற பெயரில் சர்வசாதாரணமாக இத்தவறுகள் நடந்து கொண்டுதான் இருந்தது.

இத்தகைய சட்டங்களையும் நடைமுறைகளையும் பாமர மக்கள் அறியாதிருக்கலாம், ஆனால் மிஷனெரிகள் தெளிவாக அறிந்திருப்பர், அதனால் தங்களுக்கும் தங்களது பணிகளுக்கும் இடையூறு ஏற்படலாம் என்ற எண்ணமும் அச்சமுமே அன்று இலட்சுமியை அவர்களிடமே விட்டுச் செல்ல செய்தது.

எது எப்படியோ அன்று தப்பித்து வந்த அந்த ஆதரவற்றப் பெண் குழந்தையை துணிச்சலோடு ஆதரித்து அதனால் ஏற்பட்ட பிரச்சனைகளை மேற்கொண்ட ஏமிகார்மைக்கேல் தான் தமிழகத்தில் தேவதாசிமுறை என்ற சமயசாயம் பூசப்பட்ட பெண்களுக்கு எதிரான பாலியல் கொடுமையை அழிக்க மூலக்காரணமாயிற்று. அதற்கு இந்தியாவில் முதலடி எடுத்து வைத்தவர் இந்த ஏமிகார்மைக்கேல் தான். அதன் பிறகு இலட்சுமி என்ற அந்தப் பெண் ப்ரீனா என்ற பெயருடன் ஏமிகார்மைக்கேலை அன்னையாக்க் கொண்டு வாழ்ந்தாள். அவளைத் தொடர்ந்து இந்தியா முழுவதிலுமிருந்து ஆயிரக்கணக்கான இத்தகைய குழந்தைகள் ப்ரீனாவுக்கு தங்கைகளாக வந்தனர் என்பது வேறு கதை.

**முனைவர் த. ஜான்சிபால்ராஜ்,**
**திருநெல்வேலி.**

# பாடுகளில் தோன்றிய திருச்சபைகள்



ரேனியஸ் ஐயர் தமிழகத்தில், குறிப்பாக, 1820 ஆம் ஆண்டு பாளையங்கோட்டையில் கால் வைத்த நாள் முதல் உபத்திரவங்களும், சவால்களும் அவரை தொடர்ந்து கொண்டுதான் வந்தது. தன்னை ஆதரித்து வந்த சங்கத்தினரிடமிருந்தும், தன்னுடைய ஊழியத்தை எதிர்த்த ஊர்த்தலைவர்களிடமிருந்தும் எதிர்ப்புகளை அனுதினமும் சந்தித்தார். ஆனால் திருநெல்வேலியில் யாருமே செய்ய முடியாத மகத்துவமான ஊழியத்தை நிறைவேற்ற தேவன் அவருக்கு பெலன் தந்தார். அன்று ராஜபாளையம், ஸ்ரீவில்லிபுத்தூர், சிவகாசி, விருதுநகர், சாத்தூர் பகுதி வரை இருந்த திருநெல்வேலி மாவட்டத்தின் அப்போஸ்தலர் என அழைக்கப்பட்டார். சுமார் ஒன்பது ஆண்டுகளில் 371 திருச்சபைகளும், 62 பள்ளிக் கூடங்களையும் உருவாக்கினார். ஆனால் இதன் பின்னால் அவர் செய்த விலைக்கிரயங்கள் எண்ணிலடங்காதவை. ஒரு திருச்சபையை பற்றியும் ஒரு சரித்திரமே எழுதலாம்.

### உபத்திரவப்பட்ட திருச்சபை

**வானரமுட்டி**யில் ஜனங்கள் கிறிஸ்தவர்களான பொழுது எட்டயபுரம் ஜமீன்தார் தன்னுடைய ஜமீன் எங்கும் கிறிஸ்தவர்களுக்கு வேலை கொடுக்கக் கூடாதெனக் கட்டளையிட்டார். அவர்களை ஊருக்குப் புறம்பாக்கினார்கள். அவர்கள் விளைச்சல்களைக் கொள்ளையடித்தனர். கொடிய உபத்திரவத்தினால் அநேகர், கிறிஸ்துவை மறுதலித்துவிட்டு பின்வாங்கி போய்விட்டார்கள். சில குடும்பங்களே நினைத்திருந்தார்கள். அந்த சபையின் உபதேசியார் இக்னேஷியஸ் ஆவார். அவர் வயதானவர். அவர் ஜமீன்தார்களின் ஆட்களிடம் சென்று கிறிஸ்தவர்களை கொடுமைப்படுத்த வேண்டாமென கேட்டுக் கொண்டார். அவர்களோ அவரை வாரினால் அடித்து குற்றுயிராக்கினார்கள். சபையார் அவரை ஒரு வண்டியில் கிடத்தி பாளையங்கோட்டைக்கு ரேனியஸிடம் கொண்டு சென்றனர். ரேனியஸ் கண்ணீர் விட்டார். அந்த சபைக்காக பரிதாபப்பட்டார். பெண்களும் உபத்திரவத்திலும் கிறிஸ்துவில் இருப்பதற்காக ரேனியஸ் தேவனுக்கு நன்றி சொன்னார்.

**ஓட்டப்பிடாரத்துக்கருகில்** புதியம்புத்தூரில் சபை உருவானது. எட்டயபுரம் ஜமீனுக்குட்பட்ட வானரமுட்டியில் சபையார் உபத்திரவ பட்டுக் கொண்டிருக்கையிலேயே எட்டையபுரம் ஜமீனுக்குட்பட்ட இரண்டு மூன்று ஊர்களில் சபைகள் உருவானது. சபைகள் பல ஆண்டுகள் கொடுமையாய் உபத்திரவப்பட்டன.

**செக்கடிவிளை** என்ற கிராமத்தில் கிறிஸ்தவர்கள் துன்பத்தை சகித்தனர். முஸ்லீம்கள், இந்துக்களுடன் இணைந்து சபையாரை துன்பப்படுத்தினார்கள். உபதேசியார் ஆரோக்கியத்தையும் தாக்கினார்கள். ஆலயத்தின் ஒரு பகுதியை இடித்து விட்டார்கள்.

**கணபதி நாடானூரில்** இராயப்பன் உபதேசியாரும் அவருடைய மனைவி மரியம்மாளும் செய்த ஊழியத்தினால் அநேகர் ஆண்டவரை ஏற்றுக்கொண்டனர். உபதேசியாரை அடித்து ஆலயத்தின் ஒரு பகுதியையும் இடித்தனர். ரேனியஸ் ஐயர் அந்த திருச்சபை மக்களை காப்பாற்ற நிலம் வாங்கினார். அவர்களை அங்கு குடியேறினார். அந்த கிறிஸ்தவ கிராமத்திற்கு 'மேல விசுவாசபுரம்' என பெயரிட்டார்.

**மன்னராயன் தட்டு**, பண்ணைவிளை தாவீதினால் உருவாக்கப்பட்ட சபைகளில் ஒன்று. அவ்வூரில் மூன்று குடும்பத்தார் இயேசுவை ஏற்றுக் கொண்டார்கள். கிராமத்து தலைவர்களில் ஒருவர் கிறிஸ்தவ மார்க்கத்தை ஆரம்பத்திலேயே அழித்துவிட யோசித்தார். பெருங்குளம் தேவர்களிடத்தில் கிறிஸ்தவர்களை துன்புறுத்த கேட்டுக்கொண்டார். 19.6.1831 ஞாயிறு அவர்கள் கிறிஸ்தவ, ஆண்களையும் பெண்களையும் அடித்தனர். பெண்களிடம் தாலியை பிடுங்கினர். அவர்கள் வீடுகளையும் கொள்ளையிட்டனர். பண்ணைவிளை உபதேசியார் ஞான உயிர்பிள்ளையும், பெருங்குளம் கிறிஸ்தவர் முத்தையாப்பிள்ளையும் வந்து அவர்களை கண்டித்தனர். அவர்கள் தாங்கள் கொள்ளையடித்த பொருட்களை திருப்பிக் கொடுத்து சென்றனர். அடுத்த நாளே மன்னராயன்தட்டில் அடுத்த குடும்பம் கிறிஸ்தவ மார்க்கத்தில் இணைந்தது.

**ஆலங்குளம் அருகில் காசியாபுரத்தில்** புதிதாக அநேகர் ஆண்டவரை ஏற்றுக்கொண்டார்கள். ஏழு குடும்பத் தலைவர்களை அம்பாசமுத்திரம் சிறையில் அடைத்தனர். அம்பையில் தாசில்தாருக்கு முன்பாக சேவர்கள் கிறிஸ்தவர்கள் நெற்றியில் விபூதி பூசினர். கிறிஸ்துவை மறுதலிக்க சொன்னார்கள். மறுதலிக்க மறுத்த கிறிஸ்தவர்களின் முகத்தை எரியும் திரியினால் சுட்டார்கள். வாரினால் அடித்தார்கள். கிறிஸ்தவர்கள் எல்லா உபத்திரவங்களையும் சகித்துக் கொண்டார்கள். எதிரிகள் அவர்களை விட்டு விட்டார்கள்.

**பரங்குன்றாபுரத்தில்** ஆண்டவரை ஜனங்கள் ஏற்றுக் கொண்டார்கள். ரேனியஸ் ஐயர் பரங்குன்றாபுரம் சென்றார். ஒரு உபதேசியாரை பரங்குன்றாபுரத்திற்கு அனுப்பி வைத்தார். கோபமடைந்த ஊத்துமலை ஜமீன்தார் பரங்குன்றாபுரம் சபையை மாத்திரமல்ல, அருகிலிருந்த அநேகச் சபைகளையும் கொடுமைப்படுத்தினார். அநேக குடும்பங்கள் அநேக

சபைகளில் அக்கொடுமையைத் தாங்க முடியாமல் கிறிஸ்துவை மறுதலித்துவிட்டனர்.

1833 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் கிறிஸ்தவர்களை வெறுத்தவர்கள் கடாட்சபுரம் உபதேசியார் தெய்வநாயகப் பிள்ளையின் வீட்டிற்கு தீ வைத்தனர். அவருடைய மனைவி ஜெபஞானம்மாள் விழித்து அனைவரையும் எழுப்பினார்கள். வீட்டை விட்டு வெளியேறித் தப்பிக் கொள்ள முயன்றனர். வெளியே வாசல் பூட்டப்பட்டிருந்ததால் யாரும் வெளியே வரமுடியவில்லை. உபதேசியார் வீடு எரிவதைக் கண்டு ஜனங்கள் வந்தனர். உபதேசியாரின் தம்பி கதவை ஓங்கி உடைத்து கதவை திறந்து அனைவரையும் தப்புவித்தார்கள். உபதேசியார் வீட்டிலிருந்த அனைவரும் காப்பாற்றப்பட்டனர்.

திருச்சபைக்கு உபத்திரவம் புதிதல்ல. பாடுகள் இல்லாமல் பரலோகம் இல்லை. திருநெல்வேலி திருச்சபையும் உபத்திரவத்தின் பாதையில் தங்கள் உடமைகளை இழந்தனர். வீடுகளை இழந்தனர். கொடுமையாய் துன்புறுத்தப்பட்டனர். அவர்கள் துன்பத்தைக் கண்ட மிஷனெரிகள் அவர்களை நேசித்து புதிய கிறிஸ்தவ கிராமங்களை உருவாக்கி அதில் குடியேற்றினர். உபத்திரவத்தின் மத்தியிலும் ஆச்சரியமாய் அநேக சபைகள் தோன்றின. அவரால் உருவாக்கப்பட்ட திருச்சபைகளும் பள்ளிகளும் அவருடைய ஊழியத்திற்கு சாட்சியாக இன்றைக்கும் நிலைத்து நிற்கின்றன.

**திருமதி நிருபா ஜேசுவடியான்**
**சென்னை**

அனைவருக்கும் ஒரு மகிழ்ச்சியான செய்தி,
ஜூன் மாதம் முதல் நமது
**வரலாற்றுச் சுவடுகள்**
மாத ஆய்விதழில்
**முனைவர்.த.ஜான்சிபால்ராஜ்.**
எழுதும்
**ஏமிகார்மைக்கேல்**
என்ற பெண் மிஷனெரி நமது
இந்தியச் சமூகத்திற்கு ஆற்றிய
அரும்பணிகளான,பெண்ணடிமைத்தன
எதிர்ப்பு, தேவதாசிமுறை எதிர்ப்பு, உட்பட
பல்வேறு சமூகச் சீர்திருத்தப் பணிகளைக்
குறித்த நீண்ட வரலாற்று நாவலை
மாதந்தோறும் தொடராக
வெளியிட இருக்கிறோம்.அனைவரும் வாசித்து
ஆதரவு தருமாறு கேட்டுக்கொள்கிறோம்.
**ஆசிரியர் / நாவலாசிரியர்**



வரலாற்றுச் சங்க உறுப்பினர்களான அன்பு அண்ணன் விக்டர் சாமுவேல் மற்றும் ஆல்வின் அண்ணன் நமது புத்தகத்தை வழங்கிய பொழுது

## G-pay (Google Pay) மூலமாக சந்தா நன்கொடை அனுப்ப .....

'வரலாற்றுச் சுவடுகள்' – மாத ஆய்விதழுக்கென்று
G-pay(Google Pay) மூலமாக நன்கொடை அனுப்ப விரும்புகிறவர்கள்,
91767 80001 என்கிற இந்த எண் மூலமாகவும் அனுப்பலாம். நீங்கள் சந்தா நன்கொடை அனுப்பிய பின்பு,
அதைக் குறித்த முழு விபரங்களை இதே எண்ணில் தொடர்பு கொண்டோ,
அல்லது இதே எண்ணிற்கு WhatsApp மூலமாகவோ, அல்லது christianhistorical@gmail.com மூலமாகவோ
எங்களுக்குத் தெரியப்படுத்தவும்.




**வட நெல்லை அப்போஸ்தலர் கனம் ராக்லந்தின்**
**1855 ஆண்டு பின் பகுதி நாட்குறிப்பினின்று சில வரலாற்று குறிப்புகளை அருள்திரு D A கிறிஸ்துதாஸ் ஐயரவர்க்ளின் புத்தகத்திலிருந்து ..**

**ஜூலை[1] 31.** நாச்சியாபுரத்துக்குச் சென்றோம். மண் சுவர்களும் ஓலைக்கூரையுமுடைய ஒரு சாவடியிலுட்கார்ந்து 'கெட்ட குமாரன்' சரித்திரத்தை வாசித்து கூடி வந்தவர்களுக்கு விளக்கிக்காட்டினேன். இதற்கிடையில் பவுல் தானியேலும் வந்துசேர்ந்தார். சுமார் ஒன்றரை மணி நேரம் அப்பெருங் கூட்டத்தினருக்கு உபதேசித்தோம். பவுலின் சமையலாள் சாவடிச் சமையல் பரையில் சோறு பொங்கத் தொடங்கினார். உடனே அந்த ஜனங்கள் அதைத் தடுத்தார்கள். ஏனெனில் நாங்கள் பிராமணரல்லவாம்; தாழ்ந்த சாதியினராம். பின்பு ஒருவாறு அமைதியேற்பட்டது. காலை ஆகாரத்துக்குப் பின் மறுபடியும் சாவடியில் பலருடன் பேசினோம். மாலை 5 மணிக்குக் கீழப் பொட்டல்பட்டி, கரிசல்குளம் என்ற கிராமங்களில் பிரசங்கித்து, இரவில் கூடாரத்தில் தங்கினோம்.

**ஆகஸ்ட் 1.** இன்று காலை ஸ்ரீவில்லிபுத்தூரை அடைந்தேன். அதற்குள் பவுல் தானியேல் அங்கு போய்ச் சேர்ந்துவிட்டதுமன்றி, ஒரு இடத்தில் பிரசங்கம் செய்து கொண்டுமிருந்தார். பங்களாவுக்குப் போகும் வழியில் கோயில் தேரைப் பார்த்தேன். அது அலங்கரிக்கப்பட்டிருந்தது. சுமார் ஆயிரம் பேர் அதை இழுப்பதற்கு ஆயத்தமாயிருந்தார்கள். கொஞ்ச நேரம் அவர்களுடன் பேசினேன். ஒருவரும் சரியாகக் கேட்கவில்லை. ஒருவன் கடவுளைத் தனக்குக் காட்டச் சொல்லி வாதாடினான். பிறகு நாலு பெரும்பாதைகள் சந்திக்கும் ஓரிடத்துக்குக் கொண்டுபோகப்பட்டேன். திரள் கூட்டம் என்னைச் சுற்றிக்கொண்டது. அவர்கள் பெருங் கூக்குரல் எழுப்பி என்னை எதிர்த்தார்கள்; ஏசினார்கள்; நிந்தித்தார்கள். சில பெண்கள் தான் அதில் அதிகத் தீவிரங்காட்டினர். ஆனாலும் சுவிசேஷத்தைச் சொன்னேன்.

**ஆகஸ்ட் 3.** அத்திகுளம். மாலையில் காளையாகுறிச்சி ஆராய்ச்சிக்காரர் அருணாசலம் பிள்ளை வந்தார். பிராமண ஆராய்ச்சிக்காரரான சாமி ஐயர் மாலை தோறும் தன் வீட்டுக்குப் போவதாகவும், இருவரும் சுவிசேஷத்தை வாசித்து வருவதாகவும், சாமி ஐயர் இன்னமும் சந்தனப் பொட்டு வைப்பதை நிறுத்தவில்லையென்றும் கூறினார் மேலும் தான் இந்து மார்க்கச் சடங்காச்சாரங்களைச் செய்யாததினிமித்தமும், தன் மகனைத் திருநீறு பூசக்கூடாதென்று தடுத்ததினிமித்தமும், தன் மனைவிக்கும் உறவினரான மற்ற பெண்களுக்கும் தன் மீது அதிகக் கோபம் என்றும், அண்மையில் தங்கள் குலதெய்வத்திற்கு நேர்ச்சை செலுத்த மறுத்ததால் தன்னை வீட்டை விட்டு விரட்டி விட்டதாகவும் சொன்னார்.

**ஆகஸ்ட் 9.** இன்று காலை பாணாங்குளம் வந்தேன். இது ஒரு சிறு ஊர். ஆனாலும் அநேகர் கவனத்துடன் சுவிசேஷம் கேட்டனர். தான் கிறிஸ்துமார்க்கத்திற் சேர்ந்தால், நான் அவருக்கு மாதச் சம்பளமாக எவ்வளவு பணம் கொடுப்பேன் என்று ஒருவர் கேட்டார். நான் அவரிடம், 'உம்முடைய மகன் நீர் எனக்கு இவ்வளவு பணம் தந்தால்தான் வீட்டிலிருந்து சாப்பிடுவேன் இல்லையென்றால்

1.Church Missionary Intelligencer - 1855 pp 206 ff

காட்டுக்குள் சுற்றியலைவேன். இவ்வளவு ரூபாய் தந்தால்தான் நீர் வாங்கித் தந்திருக்கும் உடைகளை அணிவேன். இல்லாவிட்டால் கந்தைகளைக் கட்டிக்கொண்டு சகதியில் புரளுவேன் என்று சொன்னால் எப்படியிருக்கும்? அதுபோலிருக்கிறது உம்முடைய பேச்சு' என்றேன். பணம் வேண்டுமென்பதல்ல; இந்த ஜனங்கள் கிறிஸ்து மார்க்கத்துக்கு வரத்தடைபண்ணுவது அவர்கள் படிக்கவேண்டிய பாடங்கள், ஆலயத்துக்கு ஒழுங்காகப் போகவேண்டுமென்ற கட்டளை, இந்துக் கலியாணம் செய்யக்கூடா தென்ற நிபந்தனை முதலிய கட்டுப்பாடுகள்தாம்.

**ஆகஸ்ட் 13.** வடுகப்பட்டி. இன்று கர்த்தருடைய நாள். இன்று எங்கள் ஊழியத்தில் முதல் ஞானஸ்நான ஆராதனை நடந்தது. மெடோஸ் ஐயரின் வேலைக்காரன் பொன்னப்பனுக்குச்[2] 'யோவான்' என்ற பெயருடன் மெடோஸ் ஞானஸ்நானம் கொடுத்தார்.

**ஆகஸ்ட் 14.** முத்துக்குமாரபுரம். ஒரு வீட்டினுள் சென்றோம். புகையிலை இலைகளை நீள நீளமாய்த் தொங்க வைத்திருந்தார்கள். அது ஒரு நாடார் வீடு என்று கண்டோம். பவுல் தானியேலுக்கு அது அதிக மகிழ்ச்சி. அவர் தென் திருநெல்வேலி நாடார்களைப்பற்றி அந்த வீட்டாரிடம் சொன்னார். தன்னுடைய மனைவிக்கு வாசிக்கத் தெரியுமென்றும், கணக்கு முதலியவை வைத்துக் கொள்ளத் தெரியுமென்றும் கூறினார். அந்த வீட்டு மனிதன், "என்னுடைய மனைவிக்கு வேதம் பிரியமில்லையென்றால் என்ன செய்வது? என்க, பவுல்" உமக்கு ஒரு விலையுயர்ந்த பொருள் கிடைத்த தென்று வைத்துக்கொள்வோம். உமது மனைவி அது ஒரு பாம்பு என்று சொல்லுகிறாள் என்றும் வைத்துக் கொள்வோம். நீர் உடனே அதனை தூர எறிந்து விடுவீரா? நீர் அவளிடம் 'பயப்படாதே. கிட்டவந்து பார். நீயே பார்த்து அறிந்து கொள்' என்று கூற மாட்டீரா?' என்று கேட்டார். அவன் மௌனியானான்.

**ஆகஸ்ட் 23.** மாலையில் கவிசைகோட்டைக்கும் போனேன், சில மனிதரேயிருந்தனர். நான் சொல்வதைக் கேட்க அவர்களுக்கு மனதில்லை. "நேரமாகி விட்டது" என்றனர் சிலர்; 'இருட்டிவிட்டது" என்றனர் வேறு சிலர். நான் போகமாட்டேன் என்று கண்டதும், அவர்கள் போகத் தொடங்கினர். நான், 'உங்களில் யாருக்காவது வாசிக்கத் தெரியுமா?' என்று கேட்டேன், ஒருவருக்கும் தெரியாதென்றுதான் எண்ணினேன். ஒரு சின்னப் பையன் என் முகத்தையே பார்த்துக்கொண்டு நின்றான். "உனக்கு வாசிக்கத் தெரியுமா?' என்றேன். தெரியாது, ஆனால் நீங்கள் வாசித்தால் கேட்பேன்" என்றான் அவன். யோவான் 3. 16-ஐ வாசித்தேன். உடனே அவன் ஓடிப்போய் ஒரு பெரிய ஆளைக் கூட்டிக் கொண்டுவந்து, என் முன்நிறுத்தி நான் வாசிப்பதையும் சொல்வதையும் கேட்கும்படி செய்தான். அதைக் கண்டதும், போனவர்களெல்லாரும், பெண்களுங்கூடத் திரும்பி வந்து அமைதியாகக் கேட்டனர்.

**ஆகஸ்ட் 24.** பாப்பையாபுரம். ஒரு மனிதன் பெரியூரிலிருந்து இவ்வூருக்கு வந்து, தென்காசியில் நடந்த ஒரு திருவிழாவைப்பற்றிச் சொல்லிக்கொண்டிருந்தான். அவன் சொன்னது: ஒரு தடவை தென்காசியில் திருவிழா. ஆயிரக்கணக்கான சனம். சில வெள்ளைக்கார மிஷனரிமார் வந்து பிரசங்கஞ்செய்தனர். விக்ரக வணக்கம் வீண் என்றும், திருநீறு பூசுவது பயனற்றது என்றும் சொன்னார்கள். இதையெல்லாம் விட்டுவிடுங்கள் என்றார்கள். வயது சென்ற ஒரு மிஷனெரிதான் இப்படியெலலாம சொன்னார். அப்பொழுது கூட்டத்தில் நின்ற ஒரு மனிதன் "நாங்கள் உங்களை எதிர்த்தால் நீங்கள் கோபப்படுவீர்களா?" என்று கேட்டு, மிஷனெரி கோபப்படமாட்டோம்' என்றார். "நீங்கள் கோபப்பட மாட்டீர்களென்று நிச்சயமாய்த்தான் சொல்லுகிறீர்களா?" என்று அவர் மறுபடியும் கேட்டார். மிஷனெரி, "ஆம், நிச்சயமாகத்தான்" என்றார். "யார் கோபம் மூட்டினாலும் கோபப்படாதிருக்க கற்பிக்கும் புத்தகம் ஒன்று எனக்கு வேண்டும்" என்று அவர் வேண்டினதும், மிஷனரி ஒரு புத்தகத்தை அவரிடம் கொடுத்தார். உடனே அந்த மனிதன், அதைச் சுக்குச்சுக்காய்க் கிழித்து, மிஷனெரியின் முகத்திலேயே எறிந்துவிட்டார். மிஷனெரி பொறுமை இழந்து, கோபப்பட்டு, அந்த இடத்தை விட்டகன்றார். கலெக்டருக்கு இது தெரிந்ததும் அந்த மனிதனைச் சிறை செய்தார். மிஷனெரி சாட்சி சொல்லப் போகவேண்டியதாயிற்று. அந்த ஆள், தான் மிஷனெரியைச் சோதிக்கும்படி அப்படிச் செய்ததாகச் சொன்னார். மிஷனெரி தன் தவற்றை ஒப்புக் கொண்டு அம்மனிதரை விடுதலை பண்ணச்செய்தார்.

**செப்டம்பர் 2** மீசாலூர். பிற்பகல். பலர் என்னைப் பார்க்க வந்தனர். அவர்களிலொருவன் பிராமண இளைஞனான செல்வம். தான் வேதத்தில் சேரவிரும்பினால் தன் பெற்றோரின் எதிர்ப்பை எப்படிச் சமாளிப்பது என்று உணர்ச்சிப் பெருக்குடன் வினவினான். மனிதனுக்கு அல்ல, கடவுளுக்கே கீழ்ப்படியவேண்டு மென்றும், அதற்குரிய பெலத்தைக் கிறிஸ்துவிடமிருந்தே அவன் பெற்றுக்கொள்ள வேண்டுமென்றும் போதித்து, என்னிடத்தில் வருகிறவனை நான் புறம்பேதள்ளுவதில்லை' என்ற அவருடைய வாக்குத்தத்தத்தை எடுத்துக்காட்டினேன். ஒரு இந்துவிடம் பேசுவதில், இன்று இவனுடன் பேசும்போது கிடைத்தது போன்ற இன்பத்தை . வேறெச் சமயத்திலும் நான் அனுபவித்ததில்லை. கிறிஸ்துவின் மாறாத் தன்மையை என்னுடைய வாழ்க்கையில் நான் அனுபவித்து அறிந்தவனாதலால், அதை அவனுக்குச் சொல்வதில் எனக்கு மகிழ்ச்சி.

**செப்டம்பர் 7.** ரோசலப்பட்டிக்கு கடந்து போனேன். மழை தூறிக்கொண்டிருந்தது. இரண்டு மூன்று பேர் மட்டும் சுவிசேஷம் கேட்டனர். அவர்களும் போய்விட்டார்கள். ஒரு மனிதன் தன் வீட்டுக்குள் என்னை அழைத்தார். அவர் அந்த ஊர் ஜமீந்தார். அங்கு சிலர் இருந்தார்கள். மிகுந்த சிரமத்துடன் தான் பேசமுடிந்தது. ஏனென்றால் அவர்களுக்கு சத்காரியங்களைக் கேட்க மனதில்லை. ஜமீந்தார் என்னுடைய குதிரையைப்பற்றித்தான் எத்தனையோ விஷயங்களைக் கேட்டறிவதில் தீவிரமாயிருங்தார்.

**செப்டம்பர் 14.** இஞ்ஜாறு. இன்று மாலை இஞ்ஜாறுக்குப் போய், பிராமணர் தெருவின் முகப்பில் நின்று பேசத் தொடங்கினேன். பிராமணர் கூட்டம் என்னை எதிர்த்து, என் மீது கல்லெறிந்து, மண்ணையும் புழுதியையும் வாரி வாரி இறைத்தனர். ஒரு பிராமணன், காவல்காரனைப் பார்த்து, என்னை அடிக்கும்படி கட்டளையிட்டான். அவன் ஒரு தடியை யெடுத்து என் தலைமீது ஓங்கி அடித்தான். அது என் தொப்பி மீது விழுந்தபோதிலுங் கூட, என் தலை விண்ணென்று வலித்தது. தொப்பியில்லாதிருந்தால் மண்டை உடைந்திருக்கும்.

**செப்டம்பர் 15.** இன்று காலை, இஞ்ஜாறுக்கு மறுபடியும் போவது தான் சரியென்று என் மனதில் தோன்றியது. போனேன்.

2. தென் திருநெல்வேலியில் C. M.S. ஊழியத்தின் முதற்பலனும் பொன்னப்பன் என்ற பெயரையுடைய வொருவர்தான் என்றறிக.

முதியவர்களான பிராமணர் அமைதியாக இருந்தனர். ஆனால் இளையவர்களும் சிறுவர்களும் கூடி, என்னைத் தாறுமாறாய்ப் பேசி, அடிக்க வந்தார்கள். நான் திரும்பி நடந்தேன். அவர்கள் என் பின்னாலேயே நடந்து, கல்லை யெறிந்து, புழுதியை வாரி என் மீது போட்டுக்கொண்டே வந்தார்கள். நடக்கக் கூடத் தெரியாத ஒரு சின்னக் குழந்தை தத்தித் தத்தி நடந்து என் முன்னால் நின்றுகொண்டு, தன் சின்னக் கைகளில் புழுதியை அள்ளி என் மீது எறிந்தது. இந்தச் சின்ன வயதிலேயே பிறரைத் துன்புறுத்த அது படித்துக் கொண்டது! இதை எழுதும்பொழுது வேறொரு சம்பவம் எனக்கு ஞாபகத்துக்கு வருகிறது !

ஜூலை மாதம் 16-ம் நாள். ஸ்ரீ வில்லிபுத்தூரில் ஒரு குளத்தின் படிகளில் உட்கார்ந்திருந்த ஒரு சன்னியாசிடம் பேசத் தொடங்கினேன். கொஞ்ச நேரத்தில் எங்களைச் சுற்றி ஒரு சிறு கூட்டம் கூடினது. எல்லாரும் அமைதியாய்க் கேட்டுக்கொண்டிருந்தனர். அப்பொழுது சற்று தூரத்திலிருந்த ஒருவன் சத்தமாக ஏதோ சொன்னான். உடனே, என்னைச் சுற்றி நின்றவர்களில் சில சிறுவர்கள் கற்களையும் மண்ணையும் என் மீது வீசினார்கள். நான் உரத்த சத்தமாய், 'ஒருவன் உன்னை வலது கன்னத்தில் அறைந்தால் அவனுக்கு மறுகன்னத்தையும் திருப்பிக் கொடு' என்ற வசனத்தை வாசித்தேன்! பிறகு நான் திரும்பி நடந்தேன். அந்தச் சிறுவர் என் பின்னால் சத்தம் போட்டுக் கொண்டே வந்தார்கள். பவுல் தானியேலையும் அன்று அந்த விதமாகவே விரட்டியடித்திருக்கிறார்கள்.

**செப்டம்பர் 16** மாலையில் புதூர் மாயத்தேவன்பட்டிக்குச் சென்றேன். இருட்டிவிட்டது. ஒரு தோப்பில் என் கூடாரமிருந்தது. இந்தவூரில் எத்தனையோ பசு மாடுகளிருந்தபோதிலும் பால் கிடைக்கவில்லை. கிராமக் கிணற்றில் எங்களைத் தண்ணீர் எடுக்கவிடமாட்டோம் என்று கிராமத்தார் தடுத்துவிட்டார்கள். தண்ணீருக்கு ரொம்பத் தூரம் போகவேண்டியதாயிற்று. இஞ்ஜாறு கிராமத்தில் எனக்கு நேர்ந்ததை இந்த ஊரார் கேள்விப்பட்டிருக்கிறார்கள். அவர்களுக்கு எனக்கு அப்படி சேர்ந்தது. பற்றிச் சந்தோஷம். பரமசிவன் என் மீது பழி வாங்கி விட்டதாக மகிழ்கிறார்கள். எப்படியோ கஷ்டப்பட்டுக் கொஞ்சம் பால் கிடைக்கப் பெற்றோம். பதினாலு வயதுள்ள ஒரு பையன் கொஞ்சம் ஆட்டுப் பாலும் கொண்டுவந்தான். இரட்சகரைப்பற்றி அவனுக்குச் சொன்னேன்.

**செப்டம்பர் 19.** மலையூரணிப்பட்டி. நடந்து சென்றேன். சுவிசேஷத்தை நன்கு கேட்டார்கள். இங்கே தெலுங்கு பேசுகிறார்கள். எல்லாரும் நாயக்கர்கள்.

**செப்டம்பர் 23.** அச்சந்தவிர்த்தான். முன்னொரு தடவை இந்த வூர்பிராமணர்கள் என்னை துன்புறுத்தியபடியால் நடுக்கத்துடன் இங்கு வந்தேன். அக்கிரகாரத்திற்குள் போகாமல் முகப்பில் நின்றேன். ஒரு பிராமணன் என்னைப் பக்கத்திலுள்ள தோப்புக்குள் அழைத்தான். ரொம்ப ஆடம்பரத்துடன் மரியாதையில்லாமல் பேசினான். அவனைக் கடிந்து கொண்டு, கெட்டகுமாரன் உவமையை வாசிந்துப் போதித்தேன், தனக்கு ஒரு புத்தகம் வேண்டுமென்று கேட்டு வாங்கி, என் முகத்தில் அதை வீசியெறிந்தான். பின்பு என்னிடம் எத்தனை யோ கேள்விகளைக் கேட்டான். பதில் சொன்னேன். . . . . . . .

**செப்டம்பர் 24.** வடப்பட்டி மாலை ஆராதனைக்குப் பின், சொக்கத் தேவரும் மருதுத் தேவரும் என்னைப் பார்க்க வந்தார்கள். முன்னால் நான் சொல்லியிருந்தவைகளை யெல்லாம் சொக்கத் தேவர் மறந்து விட்டார். பிசாசு, அதன் கிரியைகள், மாம்ச இச்சைகள் இவைகளைப் பற்றிய உபதேசத்தில் தனக்கு விளங்காதவைகளையும், ஞானப் பெற்றோர், ஞானஸ்நானத்தில் பெயரை மாற்றுதல் முதலியவைகளைப் பற்றியும் மருதுத்தேவர் பல கேள்விகள் கேட்டார். பின், மருதுத்தேவர் வீட்டில் அவர்களெல்லாரும் காலையும் மாலையும் கூடி வேதம் வாசித்து ஜெபிக்கவேண்டுமென்று ஏற்பாடு செய்தேன். பின்னர் இஞ்ஜாறு நிகழ்ச்சியைப்பற்றி நான் வழக்குத் தொடரவேண்டுமென்று அவர்களெல்லாரும் பலவாறு வற்புறுத்தினர். பகைவரை மன்னிக்க வேண்டும் என்று அவர்களுக்கு உபதேசித்தேன். அவர்களுக்கு அது விபரீதமாயிருந்தது. பின், ஜெபித்து விட்டு வந்தேன்.

**செப்டம்பர் 24.** மறுபடியும் வடப்பட்டிக்குப் போனேன். சொக்கத்தேவர், மோட்சம் நரகம் என்பது பற்றி ஒரு சோதனை நடத்தவேண்டுமென்று கேட்டார். இரண்டு கற்களை எடுத்து, அவைகளைக் கயிறுகளில் பிணித்து, ஒன்றுக்கு மோட்சம் என்றும், மற்றதற்கு நரகம் என்றும் பெயரிட்டு, கிணற்றுக்குள் போட வேண்டுமாம். மோட்சம் என்ற கல் மிதந்த தென்றால், அவர் மட்டுமல்ல, மேலும் நூறுபேர் உடனே வேதத்தில் சேர்ந்துவிடுவார்களாம் நான், "எனக்கு அவ்விதச் சோதனை நிகழ்த்த அதிகாரமில்லை. நான் சம்பந்தப்பட்டமட்டில், மோட்சம் நரகம் உண்டென்பது பற்றி எனக்கு எவ்விதச் சந்தேகமுமில்லை. சிலைகளை வணங்குவது சரியா தப்பா?" என்று கேட்டேன். "தப்புதான்" என்றார். அப்படியானால் அதை உடனே விட்டுவிட்டு வேதத்தில் சேருவது உமது கடமை", என்றேன். அவர், சோதனை நடத்தாவிட்டால் சேரமுடியாது" என்று சொல்லிவிட்டார்!

**அக்டோபர் 2.** பண்ணைவிளை ஈசாக்கு ஆபிரகாம் உபதேசியாருடன் ரங்கப்பாளையம், கிருஷ்ணாபுரம் என்ற விடங்களில் பிரசங்கித்தோம்.

**அக்டோபர் 3.** ஈசாக்கு ஆபிரகாமும் நானும் வடுகப்பட்டியில் பிரசங்கித்தோம். ஒருவன், 'எங்கள் கடவுள்களுக்கு வாகனங்களுண்டு. உங்கள் இயேசுவின் வாகனம் என்ன?, " என்று கேட்டதற்கு, 'தாழ்மையுள்ள இருதயம்' என்று பதில் சொன்னேன். கள்ளத்தூருக்கு மாலையில் போனோம். ஈசாக்கு அநேக ஜனங்களுடன் பேசினார். அவர்கள் விவாதிக்கத் தொடங்கினார்கள். நான் பேசினேன். உடனே கேலி பண்ணி ரகளை செய்தார்கள். புறப்பட்டோம். கற்களை எறிந்து விரட்டினார்கள். ஒருவன் ஒரு கத்தியை எங்கள் மீது எறிந்தான். நல்லவேளை, காயமில்லை. நாய்களை ஏவினார்கள். ஓடினோம்.

**அக்டோபர் 4.** பாட்டக்குளம். அநேகர் கேட்டார்கள். ஒரு இளைஞன் வெகு கவனமாய்க் கேட்டான். அப்பொழுது ஒரு வயோதிபன்தன்வீட்டிலிருந்துகோபத்துடன்வந்து,அவ்விளைஞனை வைது, கழுத்தைப் பிடித்துத் தள்ளி வீட்டுக்குள் கொண்டு போய் விட்டுவிட்டு, எங்களிடம் வந்து, மிகுந்த கோபாவேசத்துடன், 'உங்கள் மதம் நல்ல மதம் என்றால் நீங்களே வைத்துக்கொள்ளுங்களேன். எங்களை ஏன் தொந்தரவுபண்ணுகிறீர்கள்?' என்றார். நான், II கொரி. 5. ம் அதிகாரத்தை வாசித்துப் போதித்தேன்.

**அக்டோபர் 13.** சில்வாரப்பட்டி. கொள்ளையடிப்பதின் மூலமாயன்றி வாழமுடியாதென்று சாதித்த ஒரு வயோதிபன். அவனைப்போலவே எண்ணின வேறு பல மனிதர். மிஷனெரிமார்

புதிய மதத்தைப் பிரசங்கித்து வந்த படியினால் தான் மழையில்லை என்று அவர்கள் சாதித்தார்கள். 'திரும்பவும் திரும்பவும் இவர்கள் ஏன் பிரசங்கம் பண்ணுகிறார்கள்?" என்று அவர்கள் ஆச்சரியப்பட்டார்கள்.

**அக்டோபர் 17.** நத்தமங்கலம், வழியில் எலிங்கம்பட்டி, வையார் என்னும் ஊர்களைக் கடந்து, ரெட்டியாபட்டிக்குப் போனேன். இடியுடன் கூடிய பெருமழை பெய்தது. நாடாரொருவர் வீட்டில் தங்கினேன். அங்கு கூடிவந்தவர்களுக்குச் சுவிசேஷம் கூறினேன். 'ஐந்து வருஷத்துக்குள் திருநெல்வேலி நாட்டு மக்களனைவரையும் கிறிஸ்தவர்களாக்கிவிடுவேன் என்று இங்கிலாந்து தேச ராணியம்மாளுக்கு நான் ஒரு ஒப்பந்தத்தை எழுதிக் கொடுத்திருக்கிறேன்' என்று இம்மக்கள் எண்ணுகிறார்கள்! அதினால் தான் இப்படி ஊரூராய் அலைகிறேனாம். .

**அக்டோபர் 24.** ரெட்டியார்பட்டி. வயல் நிலங்களைக் கஷ்டத்துடன் கடந்து இங்கு வந்தேன். கூடின சனங்களுக்கு 1 பேதுரு 2 : 22-25-ஐ வாசித்து விளக்கினேன். அதில் கூறப்பட்டிருப்பவர் யார் என்று சொல்லாமலே பேசினேன். அவர் பாவஞ்செய்யவில்லை" என்று வாசித்த பொழுது, அவர்கள், "அது யாராயிருக்கும்? நாமெல்லோரும் பாவம் செய்திருக்கிறோமே!" என்று பேசிக் கொண்டார்கள். "அவருடைய வாயிலே வஞ்சனை காணப்படவில்லை" யென்று வாசித்தபோது, 'அது யார்?' என்று கேட்டார்கள். நான் பதில் சொல்லாமலே முழுவதையும் வாசித்தேன். முடிந்ததும் "அது யார்? அவர் நம்மில் யாருமில்லை!" என்று ஆச்சரியப்பட்டார்கள். கடைசியில் அவர் யாரென்று கூறிப் பிரசங்கித்தேன்.

**அக்டோபர் 27.** சரவணப்பட்டி. சுமார் இருபது பேருக்குப் பிரசங்கித்தேன். அவர்களின் ஒருவன் கூறின ஆட்சேபம், கிறிஸ்துமார்க்கத்துக்கு வந்தால் மாடுகளை அடிக்கக்கூடாதென்கிறீர்களே. நாங்கள் அடிக்கிற அடி தாங்காமல் அவைகள் செத்துப் போவதுங் கூட உண்டு என்பது. மாடுகளை அடித்து நன்றாய் வேலை செய்யச் செய்வதை வேதம் தடுக்கவில்லை. ஆனால் இம்சிப்பதும், கொடுமைப்படுத்துவதும் தப்பிதம் என்று கூறி, இயேசு கிறிஸ்து நாதரின் அன்பைப்பற்றிச் சொன்னேன்.

**அக்டோபர் 30.** ஆலமரத்துப்பட்டி, சுமார் அறுபது பேர் கூடி நின்று நன்றாகக் கேட்டார்கள். நான் முன்பு ஒரு தடவை வந்து கற்றுக்கொடுத்ததனைத்தையும் மறந்துவிட்டார்கள். 'திரும்பத் திரும்ப வந்து கற்றுக்கொடுத்தால் தான் ஞாபகம் இருக்கும்', என்றார்கள். வெகு நேரம் சுவிசேஷம் கூறினேன்.

**நவம்பர் 10.** முள்ளி : அக்ரஹாரத்துக்குப் போனேன். என்னைக் கண்டதும் பிராமணர் வந்து ' ஊருக்குள் வராதே!' என்று தடுத்தார்கள். கிறிஸ்துவைப் பற்றிச் சொன்னேன். அவர்கள் கோபாவேசம் கொண்டு, 'நீ தான் பாவி, நாங்களல்ல, உனக்குத்தான் ஒரு மதமும் ஒரு ரட்சகரும் தேவை. எங்களுக்கு இரண்டும் வேண்டாம்' என்று கத்தினார்கள். அதற்குள் வேறு சில பிராமணரும் வந்து விட்டனர். அவர்கள் மிகுந்த சத்தத்துடன், கோபமாய் தூஷணம் பேசிக் கொண்டு, "உன்னை யார் இங்கே வரச் சொன்னது? நீ அக்ரஹாரத்துக்குள் எப்படி வரலாம்? நீ ஒரு திருட்டுப்பயல். திருட வந்திருக்கிறாய். ஊரூராய்ச் சுற்றியலைகிற போக்கிரிப் பயல்களில் நீயும் ஒருவன்" என்று கத்தினார்கள். ஒரு மனிதன் "அடித்து விரட்டுவோம்" என்றான். நான் சிரித்துக்கொண்டே புறப்பட்டு வந்து விட்டேன்.

மேலே கொடுக்கப்பட்டிருப்பவை மூன்று மாதகால நாட்குறிப்புகளில் சிலவையே. அவையும் சுருக்கமாகவே கொடுக்கப்பட்டுள்ளன. முழுவதையும் எழுத இடம் போதாது. ஆனால், ராக்லந்தின் ஊழியத்தைப்பற்றி ஓரளவாவது தெரிந்துகொள்ள இவை போதுமானவை.




# தென்னகத்தின் பவுல்
# டாக்டர் N.எமில் ஜெபசிங்

சரித்திரத்தில் ஒரு பெரிய சகாப்தத்தை படைத்து, தென்னகத்தின் பவுல் என்று அழைக்கப்படும் டாக்டர் N.எமில் ஜெபசிங் அவர்களின் வாழ்க்கை வரலாறு நூல் கடந்த ஏப்ரல் 24 ஆம் தேதி மாலை 6 மணிக்கு சென்னை சின்னமலை - ஏஜி சபையில் பிரதிஷ்டை செய்யப்பட்டது. ஏஜி சபையின் அகில உலகத் தலைவரான பாஸ்டர் D.மோகன் அவர்கள் தலைமையின் கீழ் சிறப்பாக இவ்விழா நடைபெற்றது. எமில் அண்ணன் மூலம் வழி நடத்தப்பட்டும், அவர்களின் முன்மாதிரியான வாழ்வின் மூலம் ஈர்க்கப்பட்டும், இன்று தேவராஜ்ய பணியில் ஈடுபட்டு வரும் தேவ ஊழியர்கள் சகோ. ஜான் கிருபாகரன், சகோ. நவநீதர், சகோ. R. ஸ்டான்லி, சகோ. ஐசக் லிவிங்ஸ்டன், சகோ. G.P.S ராபின்சன், சகோ. கார்த்திக் கமாலியேல் போன்றோரின் அனுபவ சாட்சிகள் மெய்சிலிர்க்க வைத்தது. ஆயிரக்கணக்கான தேவ பிள்ளைகள் இக்கூடுகையில் கலந்துகொண்டு, எமில் அண்ணனின் தரிசனத்தை பெற்று சென்றனர். 22 வாலிபர்கள் முழுநேரப் பணி செய்ய தங்களை அர்ப்பணித்தனர்.

எமில் அண்ணனின் வாழ்வு இன்றைய இளம் தலைமுறையினருக்கு முன் உதாரணமாக திகழ்கிறது. கிறிஸ்துவைத் தன் வாழ்வின் எந்த சூழ்நிலையிலும், யாருக்காகவும் விட்டுக் கொடுக்காதவர். தன்னுடைய எழுத்துக்களால் மக்களின் இதயத்தை தாக்கியவர். தரிசனமும் பாடல்களும் அவருடைய முழங்காலில் உருவாகியது. அவருடைய எக்காள சத்தத்தைக் கேட்டு கர்த்தருக்கு அடிபணிந்த உள்ளங்கள் ஏராளம் ஏராளம். இந்தியாவின் அனைத்து கிராமங்களிலும் திருச்சபை உருவாக வேண்டும், பரலோகத்தை இந்தியர்கள் நிரப்ப வேண்டும் என்ற அவருடைய தொலைதூர கனவு இன்றும் நிறைவேறி வருகிறது. தேவனால் பயன்படுத்தப்பட்ட இம்மாபெரும் ஊழியரின் வாழ்க்கை வரலாறு நூல், ஒவ்வொரு இல்லங்களிலும் கட்டாயம் இருக்க வேண்டிய பொக்கிஷம். நீங்களும் வாங்கி பயன் பெறுங்கள். உங்கள் அருகில் உள்ள இளம் தலைமுறையினருக்கு இந்நூலை பரிசாக்குங்கள். பரலோகம் இந்தியர்களால் நிரப்பப்படட்டும்.



**திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தின் அன்பின் வாழ்த்துக்கள்.**

பூர்வ நாட்களை நினை; தலைமுறை தலைமுறையாய்ச் சென்ற வருஷங்களைக் கவனித்துப்பார்; உன் தகப்பனைக் கேள், அவன் உனக்கு அறிவிப்பான்; உன் மூப்பர்களைக் கேள், அவர்கள் உனக்குச் சொல்லுவார்கள். (உபாகமம் 32:7)

மோசே இஸ்ரவேல் ஜனங்களிடம் கூறும் போது **'பூர்வநாட்களை நினை; தலைமுறை தலைமுறையாய்ச் சென்ற வருஷங்களைக் கவனித்துப்பார்'** என்று கூறுகிறார். வரலாற்றின் பக்கங்களை நாம் திரும்பி பார்க்கும் போது, அநேக அனுபவங்களையும், பாடங்களையும் அவை நமக்கு கற்றுக் கொடுக்கின்றன.

பாதை தெரியாத நிலையில் இருக்கும் போது வரலாற்று சம்பவங்கள் நமக்கான பாதைகளை நமக்கு காட்டுகின்றன. (முன் நடந்ததே இப்பொழுதும் நடக்கிறது; இனி நடக்கப்போகிறதும் முன்னமே நடந்தது. (பிரசங்கி 3:15))

ஒவ்வொரு காலகட்டத்திலும் பல்வேறு வரலாற்று அறிஞர்கள் வரலாற்றை அதிக தியாகத்தோடும் அர்பணிப்போடும் தம் அடுத்த தலைமுறைக்கு மிகச் சிறந்த வழிகாட்டியாகவும் பொக்கிஷமாகவும் கொடுத்துள்ளனர். அதை போற்றுவதும் நம் அடுத்த தலைமுறையினருக்கு கொண்டு செல்வதும் நம் மேல் விழுந்த தலையாய கடமையாகும். அந்த அளப்பரிய பணியை செய்ய அர்பணிக்கப்பட்ட இயக்கங்களுள் திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கமும்** ஒன்று.

திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்** தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்கள் பலரின் அரும் பெரும் முயற்சியினால் தொடங்கப்பட்டது. நம்முடைய வரலாற்று சங்கத்தின் தரிசனத்தில், இறையியல் கல்லூரி மாணவர்கள் பலர் தன்னார்வத்தோடு தங்களையும் இணைத்து செயல்பட்டு வருகிறார்கள். மேலும் தமிழ்நாடு முழுவதும் உள்ள பல வரலாற்று ஆய்வாளர்களுடன் கைகோர்த்து இப்பணியைச் செய்து வருகின்றோம்.

ஒவ்வொரு காலகட்டத்திலும் ஆண்டவர் வரலாற்று காரியங்களைப் பதிவு செய்வதில் தமக்கு ஏற்ற இறைமக்களைப் பயன்படுத்துகிறார். வரலாற்றைப் பதிவு செய்வதில் பழைய ஏற்பாட்டில் மோசே, யோசுவா, எஸ்ரா ஆகியோரையும் புதிய ஏற்பாட்டில் நற்செய்தியாளர்கள் மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான், பேதுரு, பவுல் ஆகியோரையும் அதிகமாக பயன்படுத்தி உள்ளதை நாம் பார்க்கிறோம்.

கிறிஸ்தவ வரலாற்றை பதிவு செய்யும் இறைபணியில் நம்முடைய திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தையும் இறைவன் பயன்படுத்தவதை எண்ணி இறைவனுக்கு நன்றி செலுத்துகின்றோம்.

**நம் திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் பத்து அம்ச செயல்திட்டத்தை நினைவுபடுத்துவதில் மகிழ்ச்சி அடைகின்றோம்.**

- தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் நீண்ட இடைவெளிக்கு பின்பு மீண்டும் ஒரு வரலாறு படைத்துத்துக் கொண்டு இருக்கும் மாத ஆய்விதழ் தான் **'கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்'**. கடந்த 2020ம் ஆண்டு ஜீன் மாதம் முதல் ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு தலைப்பைக் கொண்டு பல்வேறு அரிய ஆய்வுக்கட்டுரைகளோடு மிக சிறப்பாக வெளி வந்து கொண்டிருக்கிறது. **மறைக்கப்பட்ட, மறந்த, மறைந்த** மிஷனரிகள் மற்றும் திருச்சபை வரலாறுகள், கள ஆய்வுகள், பல்வேறு அரிய வரலாற்று பொக்கிஷங்களுடன் தமிழகம் முழுவதும் தொடர்ந்து 1500 க்கு மேற்பட்டவாசகர்களுடன் வந்து கொண்டு இருக்கின்றது.
- காலவோட்டத்தில் அறுபட்டுக்கிடந்த இசைத் தமிழ் கண்ணிகளைத் தற்கால இசைத் தமிழ் உலகுக்குக் கோர்த்துக் கொடுத்த மாபெரும் இசைத் தமிழ் அறிஞர் தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் அவருடைய அளப்பரிய செயல்களை நினைவுகூறும் வகையில் **ஆபிரகாம் பண்டிதர் நினைவு மின்னனு ஆராய்ச்சி நூலகம்** நம்முடைய சங்கத்தின் சார்பில் ஏற்படுத்தப்படுள்ளது. ஆபிரகாம் பண்டிதர் நினைவு ஆராய்ச்சி நூலகமானது தமிழ் கிறிஸ்தவ மின்னனு நூலகத்தில் **முதல் நூலகம்** என்ற சிறப்பைப் பெற்றது. இந்த நூலகமானது தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், தமிழ் கிறிஸ்தவ ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பயன்படும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது. தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் ஒரு புதிய மைல்கல்லாகவும் அமையும். மேலும் அநேக புதிய தமிழ் கிறிஸ்தவ எழுத்தாளர்களை உருவாக்கவும், ஆராய்ச்சியாளர்களை உருவாக்கவும் இது உதவியாக இருக்கும் என்பதில் எவ்வித ஐயமுமில்லை.
- வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த, மறுபதிப்பு செய்து வெளியிடப்படாத கிறிஸ்தவ மிஷனரிகளின் வாழ்க்கை வரலாறு புத்தகங்களை மறுபதிப்பு செய்து வருகின்றோம். குறிப்பாக நெல்லை திருமண்டல வரலாற்று அறிஞர் பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்களுடைய படைப்புகளை மறுபதிப்பு செய்து இன்றைய தலைமுறைகளுக்கு கொண்டு செல்லவும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றோம். குறிப்பாக கடந்த ஆண்டு பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்களின் வரலாற்று சிறப்புமிக்க புத்தகம் அனைத்தையும் மறுபதிப்பு செய்து வருகின்றோம்.

- நம்முடைய வரலாற்று சங்கமும் கிறிஸ்தவ ஆய்வு மற்றும் ஆவணப்படுத்து மையமும் இணைந்து **'புத்தக வனம்'** செயலி செயல்பட்டுக் கொண்டு இருக்கின்றது. இந்த செயலி தமிழகத்தில் முதல் முறையாக டிஜிட்டல் முறையில் கையடக்க வடிவில் புத்தகமாக முழு நூலகமாக உங்கள் கைகளில் கொடுத்துள்ளோம். இன்னும் பல ஆயிரம் புத்தகங்களை பதிவேற்றும் பணி நடைபெற்றுக் கொண்டிருக்கின்றது. மேலும் பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் பெயரிலேயே **நினைவு புத்தக அங்காடி** ஒன்று ஏற்படுத்தப்பட்டுள்ளது.
- தமிழக வரலாற்றில் கிறிஸ்தவ மிஷனரிகளுடைய பங்கு குறிப்பிடத்தக்கது. அந்த மிஷனரிகள் பணி செய்த இடங்கள், அவர்களுடைய நினைவிடங்கள், தங்கியிருந்த இல்லங்கள், கல்லறைகள், வரலாற்று சிறப்புமிக்க ஆலயங்கள், இரத்த சாட்சிகளாக மரித்த மிஷனரிகள் பணி செய்த மற்றும் தங்களை இரத்த சாட்சியாக ஒப்புக்கொடுத்த இடங்களை தெளிவான முறையில் பார்வையிடவும், வெளியிடங்களிலிருந்து வரும் மக்களின் வசதிக்காகவும் Mission Tourist Map என்று செயலி உருவாக்கி அதன் மூலம் அவர்கள் தங்குமிடங்கள், வழித்தடங்கள் அடங்கிய மின்னியல் கையேடு அமைப்பது.
- வரலாற்றின் பக்கங்களில் மறைந்து கிடக்கும் கீர்த்தனை கவிஞர்கள், உபதேசிமார்கள், முன்னாள் குருமார்களுடைய வரலாற்று பொக்கிஷங்களை சேகரித்து வருகிறோம். மேலும் அவர்களுடைய வரலாற்று தகவல்கள், அவர்களால் உருவாக்கப்பட்ட திருச்சபைகள், கிறிஸ்தவ பாடல்கள் உருவாக்கம் பெற்ற வரலாறுகள், பாடல்களின் வரலாறுகளையும் சேகரித்து அதை மின்னியல் முறைக்கு மாற்றும் பணிகளையும் செய்து கொண்டு இருக்கின்றோம்.
- தமிழ் கிறிஸ்தவ பழைய புத்தகங்களை சேகரித்து மின்னியல் முறையில் ஆபிரகாம் பண்டிதர் நினைவு ஆராய்ச்சி நூலகத்திலும், பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் நினைவு புத்தக அங்காடியிலும் பதிவேற்றம் செய்வதுடன் புத்தகங்களை தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பயன்படும் விதமாக ஒரு சிறந்த ஆய்வு நூலகம் அமைக்கவும் முயற்சிகளும் மேற்கொண்டு வருகிறோம்.
- மிஷனரிகளின் வாழ்க்கை வரலாற்று சம்பவங்களை அடிப்படையாக கொண்டு ஆவணப்படங்களை வெளியிடுவதற்கான முயற்சிகள் செய்து கொண்டு இருக்கிறோம். கர்த்தருக்கு சித்தமானால், வருகிற ஆண்டு ஒரு மிஷனரியின் வரலாற்றை ஆவணப்படமாக்க திட்டமிட்டிருக்கிறோம்.
- தங்களுடைய வசதியான வாழ்வை தியாகம் செய்து நம் நாட்டிற்கு வந்து கோதுமை மணிகளாய் விதைக்கப்பட்ட மிஷனரிகள் மற்றும் தன் சொந்த மக்களுக்காக தங்களையே அர்ப்பணித்த நம் இந்திய மிஷனரிகளின் நினைவிடங்கள் மற்றும் கல்லறைகளை கண்டறிவதுடன் திருச்சபையுடன் இணைந்து பராமரித்து அவர்களுடைய தியாகங்களை குறித்த விழிப்புணர்வை திருச்சபை மக்களுக்கு ஏற்படுத்த பணியாற்றி வருகிறோம்.
- வரலாற்று சங்கம் சார்பில் மிஷனரிகள் பயன்படுத்திய கலை பொருட்கள் மற்றும் புத்தகங்கள், பைபிள், சேகரித்து வரலாற்று **அருங்காட்சியகம்** அமைக்கும் பணியில் ஈடுபட்டிருக்கிறோம். மிஷனரிகள் பயன்படுத்திய பொருட்களை சேகரித்து வருகிறோம்.
- திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம் சார்பாக வரலாற்று **ஆய்வுக் கருத்தரங்கம்** நடத்துவது வரலாற்று கள ஆய்வு பயிற்சிக்கான Workshop நடத்தும் பணிகளை மேற்கொண்டு வருகிறோம். அதற்கான ஆயத்தப்பணிகள் நடந்துகொண்டிருக்கிறது.

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே, கடந்த 2017ம் ஆண்டு அற்பமாக ஆரம்பிக்கப்பட்ட நம்முடைய திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்** இது வரையிலும் பல்வேறு தடைகளையும், நெருக்கடிகளையும் கடந்து வந்திருக்கிறது. வரலாற்று ஆய்வாளர்கள், ஆசிரியர்கள், வாசகர்கள், நண்பர்கள், நலன்விரும்பிகள் ஆகியோருடைய இடைவிடா ஜெபத்தாலும், ஆதரவாலும், உதவியாலும் நம் திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம் தொடர்ந்து செயல்பட்டு வருகிறது. மேலும் நம்முடைய மாதாந்திர ஆய்விதழும் தடைகளின்றி வெளி வருகிறது. நம்முடைய கிறிஸ்தவ வரலாற்று சங்க செயல்பாடுகள் சிறப்பாக அமைய ஜெபத்தாலும், உடலுழைப்பாலும், பொருளாதார வழியிலும் உதவி வரும் அத்துணை நல்லுல்லங்களுக்கும் நன்றியினை தெரிவித்துக் கொள்கிறோம். தொடர்ந்து நாம் செயல்பட வேண்டிய தளங்கள் அநேகமுண்டு. இணைந்து செயல்பட அன்புடன் அழைக்கிறோம். வரலாற்று சங்கத்தின் ஓர் அங்கமாக வரலாற்றை அடுத்த தலைமுறைக்கு கொண்டு செல்லும் கருவியாவோம். சர்வ வல்லமை கொண்ட ஆண்டவரின் ஆயுதமாவோம்.

**Bank : Federal Bank**
**Name : Tinnevelly Christian Historical Society**
**A/c Number : 1748 0200 0036 84**
**IFSC Code : FDRL0001748**

christianhistorical@gmail.com

**சங்கத்தில் உறுப்பினராக இணைய**
**91767 80001**



**christianhistoricalsociety.in/**
**tchsportal.co.in**




Return Requested:

To

Tamil Printed Book- For Private Cirulation Only

**CHRISTAVA VARALATRU SUVADUGAL**
# 2.2.3(4)North Street,
Bungalow Surandai-627859.
Tenkasi District
Tamil Nadu
Ph: 04633 290401

Owned & Published By TINNEVELLY CHRISTIAN HISTORICAL SOCIETY, Tamil Eduction- For Private Cirulation Only
Editor|G.MUTHAIAH SELVAKUMAR| at 2.2.3(4)North Street, Bungalow Surandai-627859. Tenkasi District Ph: 04633 290401